உ

திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரி புராணம்.

இந்நூல் ஆசிரியரின் பெயர்

## ஒ. நல்வலநாதர்.

இதனைச்

சிலபிரதிரூபங்களைக்கொண்டு

திருத்தி அதிரிகித்தவர்

யாழ்ப்பாணம் - வட்டுக்கோட்டை

நா - சிவசுப்பிரமணிய ஐயர்.

முத்திரீகரிப்பித்துப் பிரசரித்தவர்

மேற்படியூர்

வே - சதாசிவம் பிள்ளை.

சென்னபட்டணம்:

கிரேவ்ஸ் குக்ஸன் அண்டு கம்பெனியாரின் ஸ்காட்டிஷ்

யந்திரசாலையிற் பதிப்பிக்கப்பட்டது.

விஷு௵ புரட்டாசி௴.

1881.

உ

திருச்சிற்றம்பலம்.

விளம்பரம்.

# சிவராத்திரி புராணம்.

---

இப்புஸ்தகம் வேண்டியவர்கள் சென்னபட்டணம் ஸ்காட்டிஷ் யந்திரசாலையிலும், கொழும்பு. ஸ்ரீ ல-ஸ்ரீ. க. குமாரசாமிக் குருக்கள் அவர்களிடத்திலும், கலித்துறை ஸ்ரீ. அப்பாசாமி இடத்திலும், யாழ்ப்பாணம்-வண்ணைநகர் கப்பற்கிட்டங்கி புஸ்தகக் கடையிலும், யாழ்ப்பாணம் - வட்டுக்கோட்டை ம-ஸ்ரீ-ஸ்ரீ. நா. சிவசுப்பிரமணிய ஐயர் அவர்களிடத்திலும், பெற்றுக்கொள்ளலாம். விலை சரசமாக விற்கப்படும். பன்னிரண்டுக்கு ஒன்று கழிவு கிடைக்கும்.

இங்ஙனம்,

வே. சதாசிவம் பிள்ளை.

௨

முருகன் றுணை.

# சிறப்புப்பாயிரம்.

சென்னைப்பட்டணத்தைச் சார்ந்த

புரசை.

அஷ்டாவதானம்

சபாபதிமுதலியார் அவர்கள்

இயற்றிய

## நேரிசை ஆசிரியப்பா.



நிலப்பொறையாற்றும் நெடுமொழி அந்தணர்
வலத்தினிலான்ற வளம்பொதிசொற்றமிழ்
வல்லோனென்னு மாயிருஞ்சீர்த்திசால்
நெல்லைநாதப் பேர்கொளுநிபுணன்
வாய்ந்தசீர்விரவும் காந்தமாபுராண
மாதியபன்னூல் ஆய்ந்தனன் திரட்டி
மூதுலகுள்ளோர் மேதகவுணர்ந்தாங்
கொலிவார்திரைக்கடல் வளர்வான்கணையாச்
சலியாப்பராரைத் தமனியமால்வரை
தவராத்திரிபுரந் தழற்றியபெருமான்
சிவராத்திரிமான் மிய முறைட்டெளிதர
விருத்தச்செய்யுளின் விளம்பினனென்ப
அருத்தியின் அன்னதை யாவருமிற்றைஞான்
றெளிதிற்பயன்பெறற் கிலக்கியவிலக்கண
மிளிர்தருகணிதநூல் ஆயுள்வேதப்
பனுவலின்னன பயின்றம்மேதகைகீர்த்
தனமொழிப்பதமுதற் சார்தருநாடகத்
தமிழினும்புலமை சான்றம்மன்மையோன்
கடறவழ் வைப்பெனக் கலிக்கும் யாழ்ப்பாணத்
தடல்கெழுவென்றி அணிசெறிவட்டு
நகரின்மன்னு நாகேசையர்
சுகமுறத்தருசிவ சுப்பிரமணிய
பூசுரன்பரசிவ நேசவாய்மையின்

## சிறப்புப்பாயிரம்.

பலபிரதிகளைக் கொண்டுபார்வையிட்
டுலைவறவாய்தந் துதவினருக
நறைமலர்ப்பொழின் மயி னவில்யாழ்ப்பாணத்
துறைசிவபத்திமை யொழுக்கமுள்ளன்பு
தலைசிறந்தருந்தமிழ்த் தக்கோர்க்கினிய
மலிவுறுநண்பு மாண்புமிக்கோன்
வேலாயுதனெனும் விற்பனன்றுணையால்
நூலோதியதரு மாதியனுவன்று
பயனெய்திடத்தான் பயந்தமெய்த்தவச்
சுதாகரனென்னத் தோன்றிவிளங்குஞ்
சதாசிவக்குருசில் தவனனிமுயன்று
மருவுறீஇயாண்டும் வழங்க
வரிறபுமச்சி லமைவித்தனனே.

சிறப்புப்பாயிரம் முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

# சிவராத்திரி புராணம்.

## காப்பு.

வேகமானெறிசேரும்வினைகளுந்
தாகசோகம்விடாததளர்ச்சியுஞ்
சோகவாரியினல்வருதுன்பமும்
போகயானைமுகத்தனைப்போற்றுவாம். ௧

## விநாயகஸ்துதி.

ஆரணத்திடையூறடையாவகை
சீரணத்தருஞ்செய்யுடிருந்திடக்
காரணப்பொருளாகிக்கருணைசெய்
வாரணத்தினைவாழ்த்திவணங்குவாம். ௨

## தில்லைவாணன்ஸ்துதி.

பொய்கண்டேன்பொய்கூடும்புலன்கண்டேன்
புலன்கொளுயிர்பொருந்திவாழும்
மெய்கண்டேன்மெய்காட்டும்வீடுகண்டேன்
வீட்டின்பமிகவுங்கண்டேன்
மொய்கண்டேன்திருத்தில்லைவாணனுரு
ஐந்தெழுத்தும்முயங்கிவாழ்த்திக்
கைகண்டேன்மன்றன்வருகால்கண்டேன்
வினையொன்றுங்கண்டிலேனே. ௩

## இதுவுமது.

திருந்துமின்பமுஞ்சீர்தருமுத்தியுந்
தருந்தவம்புரிதாழ்குழறன்னொடும்
இருந்தசெஞ்சடையெம்பெருமானிடம்
பொருந்துதில்லைவளநகர்போற்றுவாம். ௪

## இதுவுமது.

என்னை இப்பிறவிக்கடலின்றெடுத்
துன்னுவித்துணர்வாலயத்துள்ளுறத்
தன்னைவைத்தருடந்தசிவபிரான்
மன்னுநற்புலியூர்நனிவாழியே. ரு

## சுப்பிரமணியர்ஸ்துதி.

செட்டிதேவர்கள்போற்றச்செறுபதிப்
பட்டமேவிப்படையடைவாகவே
சுட்டுவாரணந்தொல்சிறையாவையும்
விட்டவீரம்விடாதுவிளம்புவாம். சு

## நூற்பயன்.

மாசியினபரமீரோழ்வளர்சதுர்த்தசிஇராவிற்
றேசியாஞ்சிவனூர்முத்தியளித்தசீர்விரதந்தன்னை
ஆசையான்மொழிந்தோர்கேட்டோர்அருந்துயரொழிவர்என்றும்
நேசமாய்விரதநோற்போர்சிவபதநெறியிற்சேர்வார். எ

## நூலாசிரியன்.

மறைதொழும்சிவராத்திரிமான்மியம்
அறிவின்மிக்கஅருந்தவர்க்காரிய
முறைசொல்சூதன்மொழிந்தனனற்றமிழ்த்
துறையிலோதினன்சூழ்நெல்லைநாதனே. அ

## பாயிர அத்தியாயம்.

ஆதிவேள்விகள்செய்தஅருந்தவர்
சூதனைத்தனிநோக்கியெசொற்றனர்
பாதகம்பழிபாவமலங்களாந்
தீதறும்வகைசெப்புமினென்னவே. கூ

## வேற்றிசை.

காய்ந்தபுற்சங்கமீதுகனற்பொறிகதுவினூற்போல்
மாய்ந்திடுஞ்செய்தபாவம்மாயைபன்மலங்களெல்லாந்
தேய்ந்திடுஞ்சிவன்றன்பாதஞ்சேரலாந்தெளிவுமுண்டாம்
ஆய்ந்தநல்விரதமொன்றுண்டருள்வன்யான்கேண்மினென்றான். ௧௦

வேறு.

நன்னருளைசொன்னதனைநின்முனிவர்கேளா
அன்னவிரதப்பெருமைஐயவுரையென்ன
மன்னுமறைசொன்னதவமாமுனி மகிழ்ந்தே
பன்னுகதைமானுடர்பவத்தின்அரமென்றான். ௧௧

வேறு.

மையார்குழலுமையாளொருமெயினூர்தியுமகிழப்
பையாடரவுடையானிதுபகர்வான்மிகுபார்மேன்
மெய்யாய்அருள்கொடுவேதவியாசன்சொலும்அதனைத்
துய்நாயகனருளால்உரைசொலுவேனுலகுயவே. ௧௨

வேறு.

வேதியர்க்குமொழிந்தவிதிதிகழ்
சாதியர்க்குஞ்சண்டாளர்க்குமுத்தியாந்
தீதிலாச்சிவராத்திரிநோற்றிடின்
ஆதியீசன்அடியிணையெய்தலாம். ௧௩

பத்திமுத்திபராபரைநல்லருள்
சித்தியாஞ்சிவராத்திரிநோற்றிடின்
நித்தன்மால்அயனேமியன்காணொணா
அத்தனையணருள்பதமெய்தலாம். ௧௪

வேறுவேறுவிரதமும்வேள்வியும்
நூறுசெய்துநொடிக்கினுமொக்குமோ
ஆறணிந்தஅரன்கதிவேண்டினூற்
றேறிநீர் சிவராத்திரிசெய்மினே. ௧௫

என்றபோதிலிருந்தஅருந்தவர்
நன்றுநல்லவிரதநமக்கிது
என்றுநோற்பதிதன்வரலாறெலாந்
துன்றுசீர்முனிசொல்கெனச் சொல்லுவான். ௧௬

பாயிர அத்தியாயமுற்றிற்று.

———

# முதலாவது விட்டுணு வராகமாய் உதித்த அத்தியாயம்.

பூதமைந்துங்குலைந்துபொருப்பெலாம்
ஏதுமின்றியிறக்குமிறுதிநாள்
மாதுபாகனருளினில்வான்மழை
மோதஅண்டமுகடுநிறைந்ததால். ௧

அண்டரண்டமழிந்துலகேழையுங்
கொண்டலேழுங்குரைகடலேழுமே
மண்டியேறிமலைந்தபின்மாதவன்
பண்டுபோலப்படைக்கவென்றெண்ணினான். ௨

வேறு.

ஏனமதாகியெங்குநிறைந்தவனெழிலிவண்ணன்
வானவருலகுநீடுமண்ணொடுமறைகளெல்லாந்
தானருள்புரியவெண்ணித்தலமுழுதிடந்தபோது
கூனுடைக்கோட்டுப்பூமிகொழுநுனிக்கட்டிபோலும். ௩

வகைபெறவரைகளெட்டும்வகுத்துமாநாகம்வைத்துத்
தொகையுடன்கரிநிறுத்தித்துலங்கியபுடவிநாப்பண்
மிகையறுமேருநாட்டிவேதனையழைக்கவேண்டி
முகமலர்ந்துந்திமீதின்முளரிமாமுகையைநோக்க. ௪

வேறு.

விண்டலர்ந்தனதாமரைமென்மலர்
கொண்டல்வண்ணன்குறித்தருள்செய்யவே
பண்டுபோலவுலகம்படைத்திடத்
தண்டமேந்திச்சதுமுகன்றோன்றினான். ௫

தாற்றுளாயைத்தரித்தருட்டா[illegible]வும்
நாற்றிசாமுகன்றன்னையுநல்கியே
ஆற்றுமேழுகடலினுளார்வமாம்
பாற்கடற்கிடைப்பள்ளிகொண்டானரோ. ௬

ஏகமாகியிருந்தவன்ஈறிலா
ஆகமங்கள்புராணமொடாதிய
தாகவாஞ்ஞையினல்கித்தனிப்பொருள்
யோகமுற்றனனும்பர்களுய்யவே. ௭

சென்றகாலந்தெளிந்துதிசைமுகன்
நின்றகாலமுமீடெதிர்காலமும்
ஒன்றுமின்றியிறந்ததுலகெலாம்
நன்றிதென்றுபடைக்கநயந்தனன். ௮

அண்டமேழுமடுக்கினில்வைத்துமேற்
கொண்டவேழுகுரைகடலேழுசீர்த்
துண்டவெண்பிறைசூரியன்மாதிரம்
பண்டுபோலப்படைத்தனன்பங்கயன். ௯

ஆதிபூதத்தனுபவநோக்கியே
சாதிபேதமுந்தாபரசங்கமுந்
தீதிலாதநதிசெகமற்றெலாம்
ஆதிநாயகனன்றுபடைத்தனன். ௧௦

இந்திரன்முதலெண்டிசைப்பாலரும்
மந்திரங்களுமாதவவேள்வியும்
அந்தரங்களும்ஆறுசமயமும்
உந்தியாளனுலகுஞ்சமைத்தனன். ௧௧

தேவர்கின்னரர்சித்தரியக்கரும்
மூவரெண்ணங்கடந்தமுனிவரும்
பாவினோடுபலகலைநூல்களும்
நாவினேறப்படைத்தனன்நான்முகன். ௧௨

நல்லநல்லநவக்கிரகங்களுந்
தொல்லைராக்கதர்தும்புருநாரதர்
எல்லைநிற்குமிருபத்தெழுவரும்
வல்லவல்லவகையிற்படைத்தனன். ௧௩

வேறு.

தேவருமுனிவர்தாமுஞ்சித்தர்கின்னரர்கடாமும்
யாவரும்வணங்கியேத்தியெம்பிரான்போற்றியென்று
பூமலர்சொரிந்துவாழ்த்தப்பொலன்செயாதனத்திவர்ந்து
நாமகள்கொழுநன்நண்பானயந்துவீற்றிருந்தபோழ்தின். ௧௪

தான்படைத்திட்டலோகஞ்சதுமுகன்பார்க்களன்று
வான்படைக்கலம்பரித்துவானவர்மருங்குசூழக்
கான்படுதண்டினோடுகமண்டலந்தருப்பையேந்தித்
தேன்படரலங்கன்மார்புதிகழ்ந்திடவெழுந்தானன்றே. ௧௫

விண்ணுலகிழிந்துகொண்டல்விரிந்தபாற்கடலினுப்பண்
நண்ணியதென்னவாங்குநாகபராம்பாயன்மீது
புண்ணியநாதன்யோகநித்திரைபுரியக்கண்டே
அண்ணலுநணுகிநீதானரிவனெழுமியென்றான். கசு

வேறு.

எழுந்திருவெழுந்திரினிவகபரனனே
செழுந்திருவிளங்குசுதைசேர்சலதிமீதே
கொழுந்துமிளிர்பச்சைவளர்கொண்டலதுபோல
விழுந்துயில்செய்கின்றனனியாரெனவிளம்பாய். கஎ

என்றவனியம்பவிருகண்டுயிலிழந்து
மன்றலணிதண்டுளவமால்கடிதெழுந்தே
குன்றனபுயக்குரவனைக்குறுகியின்னே
உன்றனுடைநாமம துரைத்திடுதியென்றான். கஅ

அந்தவுரையேறுதலுமாலமெனவெம்பிச்
சிந்தைமிகநொந்துகனல்சீறியிருகண்ணும்
இந்திரவிமந்திரமுமேழுலகுமெல்லாந்
தந்தவனெனச்சதுமுகன்றனிமொழிந்தான். ககூ

சிந்தைதெளியாதசிறுவாமுதல்வனுனே
உந்தனையுமும்பருலகேழுமொளிரேழு
மந்தரமும்வாசுகியுமாருதமுமெல்லாந்
தந்தருள்புரிந்திலகுதற்பரமனென்றான். உ௦

கொண்டலுரைசெய்யவளர்கோகனகமேலோன்
மண்டுமமர்செய்வலினிவாளமரிலென்று
அண்டருடனெண்டிசையுமாரணமுமெல்லாங்
கண்டுபணிகின்றவனுவென்றெதிர்கடிந்தான். உக

வேறு.

ஆங்கவன்பகரக்கேட்ட அடலரிவெகுண்டுநோக்கித்
தீங்குடைச்சிறுவனேநின்சிரத்தினைத்துணிப்பனென்றுச்
சாங்கமுஞ்சரமுந்தண்டுஞ்சக்கரஞ்சூலமேந்தி
ஓங்கியமுகிலேபோலஎழுந்தனனுலகமுண்டோன். உஉ

வாங்கினன்சாபந்தன்னைவளைத்தனன்சிறுநாணோதை
வீங்கினஉலகமெல்லாம்விம்மினதிசைகளெட்டும்
பூங்கடல்கலங்கியேழுபுவிகளுங்கிழிந்தபாரைத்
தாங்கினயானைவீழ்ந்ததகர்ந்தனவரைகளெல்லாம். உங

தொடுத்தனன்பாணசாலந்தூங்கினமழையேபோல
விடுத்தனன்மேகவண்ணன்வேதியன்றருப்பைதன்னாற்
றடுத்தனன்றடுத்தபோதுதாங்கியஉலகமெல்லாம்
வெடித்தனமண்ணும்விண்ணும்வெந்தனமுகில்கள்சாய்ந்த. உச

சரமழைபரந்துபாயச்சதுமுகன்றருப்பைதன்னால்
உருமெனவீசியார்ப்பஉம்பரும்வெருவியோட
எரிமடுத்திருவராலும்எரிந்தனஉலகமெல்லாம்
ஒருவனையொருவர்வெல்லாரமர்செய்வாருற்றபோரில். உரு

வேறு.

தண்டுபிண்டிகைதோமரஞ்சக்கரம்
மண்டிவீசிமலைந்தனன்மாயவன்
கண்டுநான்முகன்கையிற்குசையினாற்
றுண்டமாகத்துணித்தனன்பரின்மேல். உசு

மிக்ககண்ணன்வெகுண்டதுநோக்கியே
மைக்கடறபுவிவானகம்வெத்துசீர்ச்
செக்கர்மேனிச்சிவனருள்வான்கலை
அக்கணத்தின்அயன்மிசைதூண்டினான். உஎ

வேறு.

காயாமலர்வண்ணன்விடுகலையானதுகனலாய்
ஓயாவெகுஉருவாயுயர்மலையாயொலிகடலாய்ப்
பாயாஉயிர்கொளவேவருமிதுவாமெனப்பரிவின்
மாயேசுரமென்னுங்குசைவிட்டான்மலரோனும். உஅ

வேறு.

வந்துவந்துசரங்கண்மலைந்தன
சிந்தைவெங்கனலோடுறுதேவர்கள்
பந்திபந்திமடிந்தனர்பாரெலாம்
அந்திவானகமொத்ததமர்க்களம். உகூ

தெரிசரங்கள்செறிந்தனதிக்கெலாம்
எரிபரந்தனஎண்டிசைப்பாலருங்
கருகிவீழ்ந்தனர்காரொடுமீன்களும்
உருகிவீழ்ந்தனஉய்வனவில்லையால். ௩0

பண்டுபூதம்படைத்தபராபரன்
அண்டமாயையினிற்பஅரியயுன்
மண்டு[illegible]சமர்வெங்கனன்மாற்றவுங்
கண்டுபின்ருகரோருருக்காட்டினன். ௧௧

அந்தரம்முதலன்பர்களும்பர்கள்
சிந்தைதோறுநிறைந்தருள்சேவடி
வந்துபேரொளியாயினவானகத்
திந்துகோடியிரவிபல்கோடிபோல். ௧௨

மந்திராத்திரிமாசி[illegible]மதி
பத்துநா[illegible]ற்பராபரன்
சித்தியாகியதேவரும்யாவரும்
முத்தியெய்தமுளைத்ததுபேரொளி. ௧௩

கூறிறூறுகதிர்மதிகோடிகள்
பேறி[illegible]ரொளியாயின[illegible]போற்
றேறுமாதவர்சிந்தையிலுற்றது
மீறியேழுலகமும்விம்முமே. ௧௪

உண்ணிறைந்ததுலோகநிறைந்தது
கண்ணிறைந்துகருத்துநிறைந்தது
எண்ணிறைந்ததுஎல்லையிலாதது
விண்ணிறைந்துமிகுந்ததுபேரொளி. ௧௫

வேறு.

கரணமும்புலன்களுங்கடந்தபேரொளி
மரணமுஞ்சனனமுமாற்றும்பேரொளி
இருளுறுமாயைகளிகந்தபேரொளி
குருபரன்காட்டியகோலப்பேரொளி. ௧௬

பேரொளியிலிங்கமாய்ப்பெருத்துநாடருஞ்
சீரொளிஇருவரும்விடுத்தசெஞ்சரம்
ஏரொளிகான்றுபுக்கேழுலோகமும்
ஊரொளிகவ்விமீயோங்கியுற்றதே. ௧௭

அவ்வொளிக்கொடுஞ்சரமடங்கஆதியாஞ்
செவ்வொளிகாரொளிதிகழ்ந்தமேனியர்
இவ்வொளியென்கொலென்றெண்ணுஞ்சிந்தையால்
அவ்வொளிஅடிமுடிஅறியவெண்ணினர். ௧௮

எண்ணியேயிருவருமிசைந்துதங்களிற்
கண்ணையுங்கருத்தையுங்கடந்தபேரொளி
நண்ணியதென்கொலாமென்றுநாடவே
எண்ணகைக்கோலமற்றெகினக்கோலமும். ௧௯

எடுத்தனர்பூதலமெயிற்றிலேனமாய்க்
கடுத்தனன்அரிஅடிதன்னைக்காண்கிலன்
உடுத்திரளேழ்தலமுலகமூடுற
அடுத்தனன்அயனொளிஅணுகவொட்டுமோ. ௨௰

மாலதைஆசையான்மருவிக்கண்டிலன்
மேலதுதேடினன்வேதனன்மறைச்
சூலிதன்மலர்முடிதொடர்ந்துநாடினன்
சாலவும்இளைத்துமெய்சலித்துநொந்தனன். ௨௰௧

வேறு.

நாடியேயனந்தகாலம்நான்முகன்மாயன்காணத்
தேடியேயிளைத்துநொந்துசிந்தைநைந்தழன்றுமீண்டு
கூடியேநின்றுதம்மிற்கோலமாரொளியைநோக்கி
வாடினேஞ்சலித்தேதாங்கண்டால்வணங்குவமென்றுசொன்னார். ௨௰௨

நல்லதென்றிருவர்தாமும்நயந்துடனொளியைநோக்கி
எல்லையிலுகஞ்சென்றாலும்எம்பிரானின்னைக்காண
வல்லவருளரோஎன்றுவாழ்த்தியேமலர்கடூவிப்
புல்லியோங்காணவின்றுன்பொற்பதங்காட்டுகென்றார். ௨௰௩

மாலவன்வாமமீதும்மலரயன்வலத்தினின்றுஞ்
சூலிதற்பரனேயென்றுதோத்திரம்பலவுஞ்சொல்லி
மூலமாமுதலேயெங்கள்மூர்த்தியேபரனேவாரி
ஆலமேயுண்டகண்டாஅரகரபோற்றியென்றார் ௨௰௪

அண்ணலேபோற்றிபோற்றியாகமமறைகடேடும்
புண்ணியநாதாபோற்றிபுலியதளுடையாய்போற்றி
எண்ணமும்விண்ணும்மண்ணுங்கடந்தருளிறைவாபோற்றி
கண்ணரும்பரமேபோற்றிஎன்றனன்கமலயோனி ௨௰௫

விண்முதற்பூதமைந்துங்கடந்தருள்விமலாபோற்றி
பண்ணியவுயிர்கட்கெல்லாம்பராபராபோற்றிபோற்றி
எண்ணரும்புவனகோடிக்கினிதருண்முதல்வாபோற்றி
கண்ணுதனாதாபோற்றிஎன்றனன்கமலக்கண்ணன். ௨௰௬

நீதியேயனந்தகாலம்நிகழ்ந்திடஅளவிட்டாலும்
ஏதுமொன்றறியலாமோ எண்ணினிற்றொலைவுமுண்டோ
சோதியேமோனஞானசுயம்பரசுருதிகாணா
ஆதியேயமலாபோற்றி அரகரபோற்றிபோற்றி. ௪௭

பூதியங்கரணநான்கும்புலன்களுங்கடந்தபோதா
தீதிலா அறிஞர்என்றுஞ்சிந்தனைசெயும்பொற்பாதா
ஆதியம்பொருளேயெங்களாருயிர்க்குயிரோ ஞானச்
சோதியேயுன்னையாவரறிந்துளர்சுருதிமூர்த்தி. ௪௮

வேறு.

தொழுதுநின்றவர்தோத்திரமேத்தவும்
எழுதொணாதஇலிங்கவொளிமிசை
பழுதிலாதஉமையொருபாகமாய்
முழுதுநாம்பரமென்றவர்முன்னின்றான். ௪௯

ஐயிரண்டுகரங்களும்ஆயிரந்
துய்யசூரியர்கூடினசோதிபோற்
செய்யமேனியுதிக்கவுந்தேவரும்
வெய்யபூதருமேவிடக்கண்டனர். ௫௦

புண்டரீகவிழிதுளிபொங்கவும்
புண்டரீகக்கரமுடிவைக்கவும்
புண்டரீகவாய்போற்றவுந்தோற்றிய
புண்டரீகப்பதங்களைப்போற்றினர். ௫௧

பூதமைந்துமொடுங்கிப்புகழ்ந்துநின்
றாதியேயென்றடிதொழுதேத்தியே
நீதிசேரிருதேவருநின்மலன்
பாதபூசனைபண்ணினர்பத்தியால். ௫௨

பூவினான்முகன்மால்புடைநோக்கியே
தேவர்தேவன்றிருவருள்செய்துபின்
காவலாகவிரேழுபுவனமும்
மேவுநாயகமென்னமுன்பிமயினான். ௫௩

வேறு.

நம்பிரானினிதருளவுஞ்சதுமுகன்மாயன்
எம்பிரானிணையெய்துமாறியம்பெனவினவ
அம்பிராவியன்சடைமுடியண்ணலும்மகிழ்ந்து
பம்பிராசிவராத்திரிமான்மியம்பகர்வான். ௫௪

படைத்தளிக்கவுந்தத்துவபதங்களும்பரந்த
அடற்கலங்களுமேந்தியவசுரர்கடம்மை
யுடற்றுணிக்கவும்நல்வரமிதற்குமுன்னுளதாய்
முடித்தபத்தியின்விரதம்நீர்முயன்றிடுமென்றான். ருரு

என்றபோதினிலிருவரும்இறைஞ்சிநின்றேத்திக்
கொன்றைமாலைவெண்பிறைநதிசடைமுடிக்கோவே
என்றுநோற்பதும்நோற்றவரெய்திடும்பதமுங்
குன்றளித்தருள்குலக்கொடிகொழுநகூறென்றார். ருசு

கேசவன்மலரயனுடனிருவருங்கேட்ப
ஆசிலாமறைமுதற்பொருள்அகமலர்ந்திசைக்கும்
மாசிபின்மதிச்சதுர்த்தசியாமினிமலியுந்
தேசுலாஞ்சிவராத்திரிநோற்பவர்சிவமாம். ருஎ

அந்தநாளையிற்காலையின்மஞ்சனமாடி
வந்துதங்குருபதமலர்வணங்கியேவழுத்திச்
சுந்தரச்சிவன்கோயிலும்வலம்வந்துதுதித்துச்
சிந்தையாற்சிவராத்திரிநோற்பவர்செகத்தின். ருஅ

அச்சமானதுதிரவேயகஞ்சுவர்மெழுகி
இச்சையாகவேகோலங்கள்பலபலஇயற்றிப்
பச்சைமாமணித்துகிலைவைபரிந்துடன்விதானித்
திச்சகந்திகழ்வேதிகைமீதினிலிலங்கும். ருகூ

நெய்விளக்குகள்பலபலதிசைதொறுநிரைத்து
நைவிளக்கியநவமணிக்குலங்களைநாற்றிக்
கைவிளக்கொடுகஞ்சமலர்பத்திரஞ்சொரிந்து
மெய்விளக்கியபவமெனும்வினைகெடவணங்கி. சுo

வேறு.

கரும்புசெந்நெல்கதலிதெங்கின்குலை
விரும்பியெங்குமெழில்பெறவீக்கியே
அரும்புமாலையணிகடொடரவே
நெருங்கநாலுதிசையும்நிரைத்துப்பின். சுக

வில்வம்வெள்ளையெருக்கொடுமென்மைசேர்
நல்லகுல்லைநலந்திகழ்சண்பகம்
முல்லைநெய்தன்முருக்கிதழ்பாதிரி
கொல்லையிற்கரவீரக்குராங்கொள்பூ. சுஉ

பிச்சிமல்லிகைபிண்டிசெந்தாமரை
பச்சைநீலம்பருத்திபொற்கோங்கலர்
நொச்சியாரஞ்செவ்வந்திபுனுண்டுளாய்
இச்சையோடும்இறைமுடிசாத்தியே. கரு

சாந்துசந்தனந்தண்பனிநீரொடு
சேர்ந்தலிங்கத்திருமுடிசாத்தியே
வாய்ந்தசேவடிவாழ்த்திவணங்கிமேல்
ஆய்ந்தசீர்த்திகள்பாடியுமாடியும். கசு

உறக்கமன்றைக்கொழிந்துமுடிவிலா
மறைக்கொழுந்தைவணங்கியும்வாழ்த்தியும்
நிறைந்தசீர்த்திகள்பாடியுநின்மலன்
சிறந்தசேவடிச்சேவைகள்பண்ணியே. கஎ

நாலுசாமமுஞ்சென்றபின்றுதனை
மாலைமாமலர்கொண்டுவணங்கியே
காலைதன்னிற்கனகம்அசனமுஞ்
சாலுமன்பினிற்றானங்கொடுத்துமேல். கஅ

அற்றைநாளுங்கடந்தபின்ஆதியைச்
சொற்றநன்மலர்கொண்டுதுதித்துமேல்
நற்றவக்குருதக்கணைநல்கியே
அற்றதொண்டர்க்கமுதுபொளிந்துமே. கஎ

பாரணைஅமவாசைமுன்பண்ணியே
பூரணன்கழல்போற்றும்புராணமுஞ்
சீரணிந்தசிவன்பெருங்கீர்த்தியும்
ஆரணம்முடன்கேட்டருள்கொண்மினே. கஅ

சீர்பெறுஞ்சிவராத்திரிக்கொப்பெனப்
பேர்பெறும்பல்விரதமும்பேசிடின்
மேருவோடும்அணுவையும்மின்மினி
சூரியன்றனிநேரெனச்சொல்குமோ கக

வேறு.

பதிற்றிரட்டியோடீண்டதாம்வற்சரம்பயிற்றி
விதித்திடுஞ்சிவராத்திரிவிரதமும்விடுக்கிற்
கதித்ததொண்டர்க்குக்கனகமுங்கலிங்கமும்வழங்கி
மதித்திடுஞ்சிவராத்திரியொழிவதுவிழக்கே. எ௦

மாவின் வேள்வியும் மன்னர்தம் வேள்வியும் வகுத்துக்
கோவினோடு பூதானங்கள் குறைவறக் கொடுத்தும்
ஆவலோடு போய்த் தீர்த்தங்களாடினும் அரனுந்
தேவிருஞ் சிவராத்திரிக் கொப்பிலைச் சிறிதும். எக

மீதரார் பலமைந்தனைக் கொன்றதும் மறைதேர்
வேதவேதியருயிர்களை வதைத்ததீவினையுங்
கோதிலா தசற்குரு மொழியிகழ்ச்சியுங் குலவுந்
தீதிலாச் சிவராத்திரி நோற்றிடிற் றீரும். எஉ

என்று மாலயனிருவருங் கேட்டிடவீசன்
நன்றிகூர் சிவராத்திரி மகிமையை நவின்று
அன்றவர்க்கு நல்வரங்களுமேனவும் அருளி
வென்றி வெள்விடையூர்ந்தொராக் கயிலைமேவினனால் எங

பாவினூல் பலதெரிந்திடு மறிஞரைப் பார்த்துத்
தாவின் மேன்மைசேர் தவமுனி சூதனுமுரைப்பான்
பூவினன் முகன் மாலொடு புரந்தரன் நோற்றுத்
தேவர் தேவனார் திருப்பதஞ் சேரவும் பெற்றார். எச

காமனோற்றுமுன் கன்னியர்க்கரசியல் பெற்றான்
நாமனுங்கரனோற்றுமுன் றயகம் பெற்றான்
றாமவெட்சியானோற்றுமுன் சகலமும் பெற்றான்
நாமவல்லியு நோற்றுமுன் னரிபனை நயந்தாள். எரு

செக்கர் மேனியன் றிசைமுகன் அரிமுதனுடைப்
புக்க பேரொளித் தெரிசனமாட்சியும் புரைதீர்
நக்கனன்னிசி நோற்றிடு பயன்களு நனுகி
மிக்க இக்கதை கேட்பவர் வீடுபெற்றுய்வார். எசு

விட்டுணுவராகமாய் உதித்த அத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - கூஉ.

## இரண்டாவது.

# அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம்.



சூதமுனிநைமிசவனத்தினிறுதொல்லோர்
மேதகுமனங்கொளவிருப்புடனுரைக்குஞ்
சீதமதிசூடுநடராயசிவநேச
நீதிவளருஞ்சிவநிசிப்பெருமைநன்றே. க

வெண்ணெய்கமழ்வாய்விமலன்வேதன்முதலானோர்
எண்ணறுதவத்தினர்கள்யாவருமிறைஞ்சப்
புண்ணியம்உருக்கொடுபொலிந்துசிவசோதி
நண்ணுகயிலாயகிரிநம்பரனமர்ந்தான். உ

மைப்பொருகயற்கணுமைமாதுமலர்நேரச்
செப்புயர்பதத்துணைகள்சென்னிகொடுதாழா
இப்புவிசிறக்குநெறியேதெனவினவ
அப்பிதழிமாமதியணிந்தவனுரைப்பான். ௩

துங்கமிகுமாசிமதிதோற்றரணிராவிற்
றங்குமுணவின்றிமிகுதாபதரொழுக்கம்
அங்கமொடுகொண்டமையருச்சனைபுரிந்தோர்
நங்கயிலைமால்வரையினண்ணியுறைவாரே. ௪

தீயகொலைசெய்துதசைதின்றவர்களேனும்
நேயமதிலாதரநிசிப்பெருமைசற்றும்
ஆயஅறிவில்லவர்களென்னினும்அனங்கன்
மாயவலையூடுபடிவஞ்சகர்களேனும். ௫

உற்றசிவராத்திரியினானுடனுறக்கஞ்
சற்றுமருவாதுறுதவத்தினர்கள்யாரும்
அற்றமில்நமக்குழையரன்னபடியான
பெற்றிசெறிநற்சரிதைபெட்புடனுரைக்கேன். ௬

வாமமயில்நீயுணர்தியென்றுமறைதேடுஞ்
சோமன்அரியங்கிவிழிகொண்டசுடர்கூறுந்
தாமமணிபூவினுளசாகரபுரஞ்சேர்
ஏமவனவாசனிடியென்னவுரைதியன். ௭

கங்குலெழுமேகநிகர்காத்திரன்முழங்குஞ்
சிங்கமுளியங்கரடிசிந்துரநடுங்கத்
துங்கவடிவேல்பகழிதூவிவி[illegible]யாடும்
அங்குலனெனும்பெயரமைந்தவனவேடன். ௯

வேறு.

சங்குரன்மணியுங்கவடியுந்தழையுந்தயங்குசெங்குஞ்சியுந்திரண்ட
கொங்கையுமிரண்டுகுழவியுமுடையகொடிச்சியோடிருந்துவாழ்ந்திடுவான்
வெங்கடுங்கானின்விளவின்வீழ்கனியும்வேரியுமீசலுந்தசையுங்
கங்குலினருந்துங்காதலானச்சங்கடந்தனன்கானகம்புகுவான். ௰

செருப்புநேர்காலிற்சேர்த்துவெங்கையிற்சேர்த்தவர்சிறப்புடனேந்தி
நெருப்புநேர்கவருங்குஞ்சியிற்கவடிநிறைதரக்குன்றிமென்பீலி
விருப்புநேரணிந்துகுணிலும்வாளிகளும்மிக்கவாயுதங்களுந்துணையாப் [வே
பொருப்புநேர்தனமான் சூலியைவணங்கிப் போயினன்வேட்டை அங்குல

வேறு.

செடிபடுமடவியின்வந்தொளிர்சிலைபலகணைகடெரிந்துறு
நெடில்படுவளைதடிகொண்டுகனிமாகவணங்கையினிலவிடத்
தொடைமிளிர்முடிமிசைவண்டிசைசுருதிகள்பலசொலமிண்டிய
முடுவெலொடங்குலவனசரன்முயல்படுசொலையின்முயன்றனன். ௧௧

வேறு.

கட்டழல்பொருந்துங்கானகத்திடையேகண்டிடுஞ்சசமெலாமோடி
இட்டதோர்வலையைக்கண்டுடனடுங்கியேகவோாமுயலையுங்காணான்
எட்டுளதிசையும்புதர்களுந்தடவியாதுதான்செய்வனென்றிரங்கிப்
பட்டிடுதுயராற்கைவிரல்கடித்துப்பரிந்தனன்பதைபதைத்துயிர்த்தான். ௧௨

மடங்கலான்மடிந்தவாரணத்தொகையும்வாரணமொடித்தமாமரனும்
இடுங்கடுங்கரடியிடந்தனபுற்றுமீற்றுழைகாலேநேர்கிருட்டி
இடைந்திடுதலமுமெரிவிழிப்பாந்தளீட்டமுமிணைமருப்பெருமை
படிந்தெழுசுனையும்வல்லியந்துயிலும்பதுக்கையுங்கடந்துடன்படர்ந்தான்.

வேறு.

கானிடைமருவியவேடுவர்காவலனொருபுதரின்புறம்
ஆனவொர்திடர்மிசைநின்றனனவ்விடைமிருகமடைந்திடும்
நானவைகொன்றுடனூனுகுசெம்புனல்நனிகொளுவனெனு
ஆனவையும்பெறலின்றிவருந்தியயர்ந்துடனேகினன் ௧௪

வேறு.

திண்கொண்டொளிர்சிலைகொண்டெ[illegible]சிறுநாணொலிபரவி
விண்கொண்டிடவருமங்குலன்விறலம்புகள்சிதறி
எண்கொண்டளவிடலின்றியஎரிமண்டுறுபொறிசேர்
கண்கொண்டுயர்துயில்கொண்டெழுகலைமானினைகண்டான் கரு

கண்டங்கவன்மிகுவெஞ்சிலைகைக்கொண்டுறவளையாப்
புண்டங்கியகுணநாணொலிகொண்டேபலவாளி
எண்கொண்டிடுகலைமானினமீரும்படிவிடவே
தண்கொண்டிடுமரமுற்றணசவரன்மனமயிர்வான் கசு

வேறு.

விட்டிடுவிசிகம்பாயவிரைந்தனகலைகளெல்லாந்
தொட்டிடுவில்லுந்தானுந்துயருறீஇச்சவரர்கோமான்
பட்டதித்தகையோவென்னாப்பசிக்கனல்கொழுந்தச்சோர்ந்து
கட்டளிமுரலும்வில்வக்கானகம்படர்ந்திட்டானே. கஎ

வேறு.

படர்ந்திடுகானத்திடமெலாஞ்சுற்றிப்பகற்பொழுதங்ஙனங்கழிய
மிடைந்திடுதருச்சூழ்தடம்பொழிலெய்திமெல்லடிப்பாலனொன்படுவார்
கடும்பசிகனற்றநம்மனைக்கொடிச்சிகலங்கிடுமெனமனம்பதைத்தே
அடுந்திறலெயினன்வருந்துழியருக்கனத்தமால்வரையிடையடைந்தான்.

மருவியஞாலமன்னிவாழுயிர்கள்மனமகிழ்ந்திறைஞ்சிடமிளிருந்
திருவளர்மேருச்சிகரமால்வரையைத்தினந்தினம்வலம்வரும்அலரி
விரிகதிரொளிரும்வனப்பெலாஞ்சுருக்கிவேலைபுக்கொளித்திடக்கங்குற்
கருகியவிருளிற்கானகமிருளக்கடிதினவ்வெல்லையுங்கடந்தான். ககூ

வேறு.

மன்றுளீசனைவாழ்த்திலர்சிந்தைபோற்
றுன்றுபேரிருள்கண்டரிதும்பிவந்
தின்றுகூடினுமென்செய்வதென்றவண்
நின்றமாமரமேறநினைந்தனன். உ௦

மிக்ககூவிளமேவவவ்வேடுவன்
தக்கபாவச்சலதியின்வான்கரை
அக்கணங்கடந்தேறவினம்மரம்
புக்கிருந்தனன்புண்ணியத்தாற்றினால். உக

வேறு.

இரவிருள்பெருகவரும்பசியெரிவுறவிழிதுயில்வின்றிமுன்
அருமையினுணவுதுறந்தனனயர்விலனமர்தருகடவிளை
உருவியவிலைபலஅன்புடனொருமுனிபணியவுவந்தடி
விரவியநுதலொளிரங்கணன்வியன்மணிமுடியில்விழுந்தனே. உஉ

வேறு.

அந்தவனத்தவனிருப்பஎன்செய்வேனென்றருங்கொடிச்சி
அரும்பசியாலிரண்டுமைந்தர்
சிந்தைதகலங்கிடவுயர்ந்தபரண்மேலாகிச்
சிறுவருடன்மிகுதுயர்சேர்ந்துறங்காளாகி
அந்திவரும்பேரிருளைநோக்கிநோக்கி
அரும்புலிகடிரிதருகானடைந்தாரின்னம்
வந்திலவொன்மணாதர்தரியாவொன்று
மண்மகளுநடுங்கிடவேமயங்கிவீழ்ந்தாள். உங

இருந்துவிழிப்புனல்பரப்பிமைந்தாதம்மை
எடுத்தெடுத்துமடியின்மிசையிருத்திமோந்து
அருந்துணையேகண்மணியேயமுதேதேனே
அரில்செறிகானகம்புகுந்தாருமதுதந்தை
விரிந்தபெருங்கானகத்திலுலவும்பொல்லா
மிருகமவருயிருணவீந்திறந்திட்டாரோ
பொருந்துமுணவின்றியெவண்சென்றாரென்றுப்
பூங்கொடிச்சியிங்கிதனிபுலம்பலுற்றாள். உச

வேறு.

தஞ்சமொன்றிலதாகியேதனித்துடன்வேகமாய்ச்சென்றார்
செஞ்சராசனம்வாளிகளின்றியேதியங்கிடும்பொழுதிற்
குஞ்சரக்குலஞ்சென்றுயிர்கொண்டவோகொலைத்தொழில்புரியும்
வெஞ்சினக்கொடுவல்லியம்பாய்ந்ததோவென்றுளமெலியும். உரு

கூனல்வான்பிறைப்பற்றிகழ்கூருகிர்க்கவிழ்தலைக்கரடி
கானகந்தனிநடந்துளகாதலனுயிரினைக்கவர
ஆனதான்மடிந்தார்கொலோவடுங்கொடுநீண்மருப்பேனம்
ஊனுக[illegible]டமடிந்தனர்கொல்லெனவுலம்பியேயிரங்கும். உசா

புள்ளிசேர்பனைநேருடற்பணுமணிபொதுளுநஞ்சுறைந்து
துள்ளுபற்பெரும்பாந்தளாற்றெல்லுயிருணர்வினையிழந்து
தெள்ளுமாமணியனையவென்னுயகர்சிதைந்தனரோவெனுவலறித்
தள்ளருந்துயர்ச்சலதியின்மூழ்கியேததும்பிநைந்துளநனியுலம்பும். உஎ

வேறு.

விண்டுறுசெந்தேன்கடமைமிக்கதசைகிழங்குவகைவிரும்பியேனற்
பிண்டியுடன்மனமகிழ்ந்துதினமருந்திப்பெட்பினுடன்வாழ்ந்ததெல்லாம்
கண்டுயில்வார்கனவாகிப்போனதுவோகலியுமினிச்சேர்ந்ததேயோ [ளே
எண்டகையகண்மணியேதலைவாவென்று ஏங்கியிளையாதமனமயாந்திட்டா

பாயாதவேங்கையந்தார்மார்பினனேபகைவருயிர்பருகிநீண்டு [ளாய்
காயாவின் மலர்நிகர்த்துப் பொருப்பினைவென் றுலம்பொருவுங் கடகத்தோ
வெயாரும்வனத்தடைந்தாய்விளிந்தனையோவிம்மியடியாண்மெலிந்தே
ஓயாமலரற்றுமுறைகேட்டிலையோவென்னினியானுஞற்றுமாறே. ௨௯

பீலிமுடிப்பெருந்தகையேபெட்பினுடனருள்புதல்வர்பேசுமின்சொற்
சீலமுமங்கவர்முகங்கடிகழ்பொலிவும்நினைந்திலையோசிறந்துமேவுங்
கோலமுநீசெல்பொழுதேகூடியுடன்சென்றதுவோகுலவுவென்றி
சாலுமென்றன்மணாளாதாதனித்துயிர்நானுய்குவனோதமியளென்றாள். ௩௰

வேறு.

ஒன்றொடிகங்குலினிங்ஙனமுண்டியுமின்றியொளிர்ந்தெரி
மண்டுபெரும்பசிமீண்டுறவண்டயில்வேல்விழிதுஞ்சிலள்
பண்டியல்கின்றபெரும்பரண்மீதிருபாலகர்தம்முடன்
எண்டிசையுந்தனிநோக்கிமெலிந்துவருந்தியிருந்தனள். ௩௧

வேறு.

பொங்குபுலைத்தொழிறங்கியவஞ்சகர்புந்தியினின்றெளியை
அங்கண்மறைத்தபவத்தைநிகர்த்தவடுத்தவிருட்டொகைசீர்
அங்குலனிட்டதழைக்குமகிழ்ந்தருளம்பரனுமெனவே
செங்கதிர்வீசியுயிர்த்தொகைமீதுதிவாகரன்வந்தனனே. ௩௨

சிந்துநுரைத்திரள்செந்துகிர்முத்தொடுசிந்துகடற்றிரைசீர்
முந்துபணிப்பெருரத்தினமொன்றைமுழங்கியவானிடையே
உந்தியெறிந்தெனவிண்டெனுமந்தரமுற்றகடற்றிரை[illegible]
டிந்திரபா[illegible]றைந்தகுடங்கொழுந்தெனவந்தனனே. ௩௩

சங்கொலிபம்புகடற்கலைமாதுதரித்தகறுப்புநிறந்
தங்குபடத்தையொழிப்பமுகத்தொளிசார்திலகம்மெனவும்
அங்குமறைத்தொகைநாடுபரம்பொருள்ஐம்முகமூர்த்திதிருச்
செங்கையினுற்றிடுநேமியெனத்திகழ்தினகரன்வந்தனனே. ௩௪

வேதவிதிப்படியந்தணர்தந்திடுமெய்ப்புனல்பெற்றணிசெய்
கோதவரக்கர்குலத்தைமுடித்தொளிகொண்டபெருங்கருணை
ஆதபநாயகனுற்றிடவானுடனகிலமுமேனிதளிர்த்
தேதமில்துஞ்சலொழிந்தனமாதிரமிலகிவிளங்கினவே. ௩௫

அங்குலவேடுவனப்பொழுதேமரமதனினிழிந்தடலார்
துங்கமிகும்வரிவில்லுறுவாளிதுரந்துயிர்கொன்றுதசை
அங்கணெடுத்துமிகுத்தவிருப்புடனளிதொடர்தேன்வதையுஞ்
செங்கைதரித்துவிரைந்துதன்மாமனைசேர்வனமுற்றனனே. கசு

வேறு.

மண்டுபெருங்காதலுடனெதிரேவந்த
மைந்தரையுமனைவியையுமகிழ்ந்தணைத்துக்
கொண்டுதடங்குடிலதனிற்பிண்டியோடுங்
குளநென்முதலானமைந்தவுண்டிதின்று
பண்டையிலுமெண்மடங்காயிருந்துநாளும்
பக்கியுட்னவிலங்கினங்கள்பதைப்பவீட்டித்
துண்டுபுரிதசையருந்திவேரியுண்டு
சுலவிவழிமறித்தரியசூறைசெய்தான். கஎ

நெடுங்காலமிந்தவகையங்குலவேடுவன்புரிந்து
நீதிமுறையுணர்விலாது
படுங்காலையுடல்மெலியவாயுண்மிகப்
பற்கழன்றுகோல்தரித்துப்பழுங்கணீடத்
தொடுங்கால்கைசோரமிகுவாதபித்தஞ்
சுருளவுடல்நடுநடுங்கச்சொற்றளம்ப
அடுங்காலனுயிர்கவருநாளுஞ்சேர
அறிவழிந்துசட்டகத்தைவிடுக்கும்போழ்தின். கஅ

கண்டதிசைநடுநடுங்கவடவையங்கி
கடைசிதறும்விழிகிளையுங்கையிற்பாசந்
தண்டமிகுபரசுஎழுச்சூலம்வேல்நீள்
தடியேந்தியமதூதர்தயங்குகின்ற
துண்டமதிபோலெயிறுந்துலங்கவந்து
தோன்றியடித்துரப்பிமனைமக்களேங்கி
மண்டுபெருந்துயரமுறஅங்குலன்றன்
மன்னுயிரைக்கணப்பொழுதின்வவ்விறோ. கக

எல்லையிலாநெடுங்காலன்றூதராஞோர்
இவனுயிரையங்ஙனமேகொண்டுபோகச்
சொல்லுமடாதவமறியாவேடன்மார்பைத்
துளையுமடாவழன்மீதேதுவளக்காய்ச்சி
வெல்லுமெழுப்படைதிரித்துமோதிமோதி
வெந்தீயநீர்செவியின்மேவவிட்டுக்
கொல்லுமடாஐந்தெழுத்தைச்சொல்லாநாவைக்
கோதுமடாவெனவருத்திக்கொண்டுசென்றார். உ0

திருந்துபுகழ்க்கயிலைமலைச்சினகரத்திற்
றேவர்பிரானிதையறிந்துநந்தியென்னும்
அருந்தவனுக்கருள்புரிந்தேஅங்குலன்னை
அரியயமதூதர்மிகஅச்சஞ்செய்தார்
விரைந்துகணந்தனைவிடுத்துப்பாசநீக்கி
விமானமதினேற்றியிங்ஙன்வருவியென்று
. புரிந்தவுரைப்படிநந்திகணங்களேவப்
போற்றியவர்தென்றிசையிற்புகுந்தாரன்றே. சுக

வேறு.

நெடியசெஞ்சடைநின்மலனுரையாற்
கடுகிவந்தகணங்கள்விரைந்துசென்
றடுநமன்படர்தம்மையகற்றியே
விடுமின்வேடனையென்றுவிளம்பினார். சஉ

வேறு.

நாங்களருந்தவம்புரிவார்தம்மையுற்று
நலிந்திடவுமைந்தெழுத்துநவிலாதாரை
நீங்கள்கொடுபோய்முத்திசேர்த்திடவு
நீதிமுறையுரைத்திடுமோநிகரிலாத
திங்குபெறும்அங்குலனும்வனத்திற்றேன்றிச்
செறிபறவைவிலங்கினங்கள்கொன்றுதின்றான்
ஆங்குயமன்முன்கொடுபோய்விடுத்தால்நீங்கள்
அழைத்தேகுமெனக்காலதூதர்சொற்றார். சஙு

பாடுபுகழ்ச்சிவகணங்களிதனைக்கேட்டுப்
பாம்பணியுநம்பரன்மேற்பத்தியில்லா
மூடன்மிகுகொலைபுரிந்துதசையருந்தி
மோகமயல்வளர்வேரிவிரும்பியுண்டு
காடதனிற்செல்பவரைவருத்துகின்ற
கடும்பாவியானாலுங்காளமுண்டான்
நீடிரவிலுணவுதுயிலின்றியெந்தை
நிறைமுடியிற்பத்திரமிட்டிருந்தானன்றே. சச

விடையேறிமதியமுடனிதழிசூடும்
வேதாந்தப்பொருளானவிமலமூர்த்தி
திடமானவருளாலேயங்குலன்னைச்
செய்யமணிவிமானமதிலேற்றிச்செல்வோந்

தடையேதும்புரியாதீரென்றுகூறித்
தகைபாசப்பிணிப்பகற்றித்தவத்தோர்போற்ற
அடலாரும்வேடுவனைமானத்துய்த்து
அரன்கயிலைநோக்கியவரகன்றாரன்றே. ௪௫

சிவகணங்களிந்தவகைகொண்டுசெல்லச்
சினந்திருகித்தடுத்தயமதூதர்தம்மைப்
பவன்முதலாச்சொலுங்கணங்கள்கோபமிஞ்சிப்
பதைபதைத்துத்துடிப்பவவர்பரசுதண்டந்
தவரோடுநெடுவாளிவிடுத்தடித்துத்
தகர்த்துமண்டையுடைத்[illegible]தைத்துவருத்தபோதிற்
கவைசாரும்பதமேதிநாதன்வைகுங்
கடிநகரைநோக்கியமகணங்கண்மீண்டார். ௪௬

வேறு.

ஒழுகுசெம்புனலும்வடுப்படுமுடம்புமுனைதடுமாறியமனமும்
அழுதொலிபரப்பும்வாயுமாய்மிக்கஅந்தகன்புரத்திடைச்சென்றோர்
தொழுதகையுடனேதருமனையடுத்துத்துங்கமில்வேடனையீசன்
விழுமியகணங்கள்கவர்ந்துடன்சென்றாரென்றனர்வேந்தனுமுணர்ந்தான். ௪௭

பாகனைமுருக்கும்பகட்டினிலிவர்ந்துபரிசனர்பற்பலர்சூழ
மேகநேர்வடிவுங்குஞ்சியுஞ்சூலம்விளங்குதண்டிலங்கியபாசம்
வேகமார்வ[illegible]வையனல்பொழிவிழிகள்விளங்கநம்பராபரனுறையும்
யோகமார்முனிவருளங்கர்கயிலையோங்கலைநாடியேநடந்தான். ௪௮

கவரிகாலசைப்பமதிக்குடைநிழற்றக்காளந்தன்னுமைபீலி
திவழ்குடமுழவுபம்பைமல்லாரிதிமிலைதுந்துபியொடுதடாரி
புவனியெண்டிசையுஞ்செவிடுறத்தருமன்புராதனவேதமெஞ்ஞான்றும்
உவமைநாடரியபரம்பொருளாகுமுமாபதிகயிலையிற்சென்றான். ௪௯

மன்னுயிர்க்கறிவாயைந்தெனுங்கலையாய்மந்திரம்பதங்கள்வ[illegible]முமாய்
அன்னையாயுலகுக்கப்பனுய்ஞானத்தான்றவரிதயவான்கோயில் [ந்
துன்னியாள்விமலன்சிவையொடுமருவித் தொல்லுயிர்படைத்தளித்தழிக்கு
தன்னிகரிடமாங்கயிலையஞ்சயிலத்தருவளஞ்சிறிதுரைசெய்வாம். ௫௦

புரங்கடந்திடும்அகண்டமா[illegible]முனிவர்புந்தியிலனுதினம்பொருந்தும்
உரங்கடந்தமெய்ஞ்ஞானமேவடிவாயுற்றிடுமொருளொலாந்தனது
கரங்கடந்திடுபிரமையாற்றெருட்டிக்கடவுளாம்விரிஞ்சனேமுதலோர்
வரங்கடந்தருளெனக்கரமுகிழ்ப்பவளர்வதுகயிலைமால்வரையே. ௫௧

நாட்டமேலுறச்சமாதியினியதிநனிவளர்த்தொன்றெனும்பொருளை
வேட்டமைந்திடுதாபதரீட்டமும்விழிவழிஆனந்தவாரி
காட்டநாண்மலர்கொண்டருச்சனைபுரிகடவுளர்கூட்டமுங்கவின்சேர்
பாட்டமைத்துளாநரம்புளரோசையும்பயில்வதுகயிலைமால்வரையே. ருஉ

காளமுண்டிருண்டமிடற்றினன்நெற்றிக்கட்டழல்வெம்மைபோயுறலாற்
பாளமாயுருகிச்செந்நிறங்காட்டிப்பாய்ந்திடும்பான்மதியெனவே
கோளமார்பவளமாமணிசிதறிக்குமட்டிவெண்ணுரைத்திரள்புரட்டித்
தாளிநேரருவிசரிதரநிவந்தசயிலமக்கயிலைமால்வரையே. ருங

விண்டொடுமருப்புக்கூவிளநரந்தம்வேங்கைசீர்வெள்ளில்பொற்கொன்றை
வண்டடென்றிமிறுதும்பிபாட்டயம்மகரந்தந்திசைதிசைசிதறத் [றும்
தொண்டருக்கெளியான்சடையுறுங்கங்கைத் துளியுறமறைந்துடன்றோன்
அண்டருக்கரியசாரல்பெற்றுடையதணிசெழுகயிலைமால்வரையே. ருச

பஞ்சபூதமுமவற்றெழுபுலன்களும்பரவுகன்மேந்தியத்தொகையுந்
துஞ்சலின்றியமனமுதனான்குந்துவக்கிலாதொளிர்பிரகிருதி
எஞ்சலின்றியவக்கினிச்சுரூபம்இரணியகருப்பவான்கலையின்
விஞ்சுமெய்ப்பொருளெங்கணுமிளிரிடம்வெள்ளிமால்வரையெனும்பிறங்கல்

வேறு.

இத்தகைக்கயிலைக்குன்றினிலகுபொற்சிகரநீடுஞ்
சுத்தமார்நகரவாயிற்றொல்லுயிருண்ணுங்காலன்
தத்துவப்பொருளைக்காணவருதலுந்தவத்தோர்போற்ற
அத்தலைவிமானமீதின்அங்குலன்வந்தானன்றே. ருசு

அருமலர்த்தொடையன்மார்பனங்குலன்நந்திதேவர்
திருவடித்துணைவணங்கச்சிவபிரானருளினாலே
தருமனைவேடர்கோனைச்சங்கரன்முன்னருய்ப்ப
ஒருமையாய்ப்பலவாயான்றஉமாபதிசரணந்தாழ்ந்தார். ருஎ

வேறு.

தூவிதழிமலர்ச்சடையானடியிற்றாழ்ந்து
தொழுமளவில்நிறைமதியன்கூடுமெந்தை
தாவிலருமறைநான்குந்தவாயாற்
றருமமனுவெனுமளவிற்றருமனும்
நாவிரவுமறையினனேகயிலையாண்டநாயகனே
நஞ்சையுண்டகண்டாதில்லைத்
தேவர்கடம்பெருமானேசிவனேமேருச்
சிலையவனேயென்று துதிசெய்தான்மன்னோ. ருஅ

## வேறு.

வள்ளறருமன்புரிவணக்கமதுகண்டே
தெள்ளமுதநேரவருள்செய்தகமகிழ்ந்து
கள்ளவிழ்மலர்த்தொடைகலந்துளபுயத்தாய்
உள்ளகுறைசொல்கெனமுனந்தகனுரைப்பான். ௫௯

சாகரபுரத்தினயல்சாரொருவனத்தின்
மோகரமுடன்குலவுமூர்க்கனொருவேடன்
சேருறுபவத்தனுயிர்தேவநினதன்பர்
ஆகயிலையுய்த்தனர்நம்மாணையையழித்தா. ௬0

## வேறு.

இமையவரிலெனக்களித்[illegible]ரசுநாயேன்
இலகியநின்றிருவருளாலியற்றுகின்ற
தமையுமெனதேவலுறுதூதரானோர்
ஐயநினதேவலராலடியுண்டெய்த்தார்
உமையனையர்க்கினியவனேநஞ்சையஞ்சா
துண்டவனேயெனையுய்யக்கொண்டுகாக்கிற்
சமையமிதுமலர்க்கழல்கள்பிரியாவின்பந்
தந்தருளவேண்டுமெனத்தாளில்வீழ்ந்தான். ௬௧

வீழ்ந்தபொழுதருள்சுரந்துவிமலமூர்த்தி
விபுலைதனிலுயிர்கவருந்தருமவேந்தே
காழ்ந்தமனத்தினனெனினுமந்தவேடன்
கருதரியசிவநிசிசேர்கங்குறன்னிற்
சூழ்ந்தபவத்தொடக்கறுக்குமிலிங்கமீதிற்
றுய்யவில்வத்தழைசொரிந்துதுஞ்சானாகித்
தாழ்ந்தபுறக்கரணமதாற்பாவஞ்சிந்தத்
தன்னிகரில்சாலோகஞ்சார்ந்தானன்றே. ௬௨

மந்திரத்திற்பிரணவநல்லக்கரத்தின்அகரம் உயர்வருணநான்கின்
அந்தணர்மெய்வித்தைதனிலரும்பிரமவித்தையும்போல் அரியேயாதி
அந்தரத்தோர்பரவுசிவநிசி அதுவேவிரதமதினதிகமாகுஞ் [றான்.
சுந்தரமார் அங்குலன்முன்செய்தவத்தாற் றுய்யசிவநிசிவிரதத்தூய்மையுற்

வேடனெனும்அங்குலன்சீர்
விளம்புதிருக்காதைதனைவிரும்பிநாளுந்
தேடிமிகவுரைப்பர்நல்விரதம்நோற்பார்
செம்மையாலிக்கதையைவிரித்துச்சொல்வார்

நீடுபுகழ்ச்சரிதமதுகேட்பார்யாரும்
நித்தியமார்நமதுஊயர்நீனைதியென்றே
ஆடரவம்புனைந்தபிரான்எம்மையாளும்
அண்டர்பிரானமற்குனாத்துவிடையுமீந்தான். கூச

மறைதேடஅரிதேடஅயனுந்தேட
வளர்பவளப்பருப்பதத்தைமனத்தால்வாக்காற்
குறைதீருமிருவிழியான்மதித்துப்போற்றிக்
கூசாதுதரிசிக்கக்குவலயத்தின்
சிறைமேவுசாகரமாநகரவேடர்
செம்மலெனுமங்குலனுவின்றுபெற்றேன்
அறிவீரொன்றியமபடர்க்கெடுத்துனாத்து
அந்தகனுந்தென்றிசையினுடைந்துவாழ்ந்தான். கூரு

வேறு.

மன்னுகணநாதனெனவானவர்வணங்க
உன்னரியநந்திசிவமந்திரமுனாப்பக்
கின்னரநரம்பிசைகிளர்ந்தழகுசெய்ய
அன்னகயிலாயகிரிஅங்குலனிருந்தான். கூகூ

ஆயிரமுகப்புணைபரித்தமலனன்பார்
காயிரதவாணனெலிஇன்னிசைகலிப்பப்
பாயிரமறைத்தொகைசொல்பங்கயனுமாலும்
ஏயரததாளமுடன்மத்தளமியம்ப. கூஎ

தும்புருவலம்புரிகடுந்துபியொலிப்ப
நம்புயர்சிவாகமநவின்றடியர்போற்றச்
சம்புசிவஎன்றமரர்தாண்மலர்வணங்க
அம்புறுவிடம்பயின்மிடற்றரனமர்ந்தான். கூஅ

வேறு. இனிதினிக்கதையின்புடனேதினேர்
அனையசீர்த்தியைஅன்புபெருகவே
வினவுவோர்கள்சிவநிசிமெய்ப்பயன்
றனையடைந்துசிவபதஞ்சார்வரே. கூகூ

என்னஇக்கதையெண்டகுசூதனும்
மின்னுமுப்புரிநூலணிவேதியர்
மன்னுபுந்திவளம்பெறச்சொற்றனன்
அன்னகாலையருந்தவர்கூறுவார். எ௦

இரண்டாவது அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம் முற்றிற்று.

ஆகத் திருவிருத்தம்-கசுஉ.

## மூன்றாவது.
# சூதகுமாரன்பதவிபெற்ற அத்தியாயம்.

காதும்வேலுவென்காதைதயைச்சொற்றனை
பூதலந்தனிதோற்றவர்தம்புகழ்
சூதமாமுனிஎவ்வகைசொல்லென
வேதவேதியன்மெய்க்கதைகூறுவான். க

கபிலைகோடுறக்கார்வயலூடுறைத்
திவலையோடுதெறித்தருணித்திலம்
நவில்வசோடலதின்றியுநாடெலாம்
விபுலைசூழ்தரமேதினிவீறதாம். உ

விந்தமால்வரைமேதினிக்குத்தரம்
அந்தநாட்டிலணிகெழுமாநிதி
சந்தஇப்பிகள்சங்கமுகுத்தலின்
இந்துவெழிலொளிவீசுமிளம்பிறை. ௩

பஞ்சராவியமெல்லடிப்பாவையர்
தஞ்சராநிசர்மைந்தருஞ்சாற்றுறு
மஞ்சராவியசோலைகள்வாவிசூழ்
குஞ்சராபுரியென்பதொர்கோநகர். ௪

அந்தமாநகர்தன்னிலமரர்கோன்
சந்தமாரமராவதிசாலுமாற்
பந்திபந்திபரிகரியானமும்
மைந்தரோமகளிர்வளம்பெறும். ரு

வேதசாலையும்வேள்விசெய்சாலையும்
மாதவங்கண்மகிழ்வுறுசாலையுந்
தீதிலாதசிவன்பெருங்கோயிலுஞ்
சோதியோடுதுலங்குறுந்தொன்னகர். ௬

அன்னமாநகருக்கரசானவன்
மன்னர்மன்னன்வளம்பொலிவாழ்க்கையன்
மின்னும்வெண்குடையன்மிகுவேள்வியன்
றன்னதானையிற்சக்கரமோச்சுவான். எ

உரமுரஞ்சியதோளினனென்னலார்
சிரமுரஞ்சியதாளினன்செங்கையில்
அரமுரஞ்சியவாளினனண்ணலார்
பரமுரஞ்சயனென்றொருபார்த்திவன். அ

அந்தமன்னவற்காகமமாமறை
புந்தியோடுபயிற்றுபுரோகிதன்
அந்தவானவர்தங்குருவாமவன்
சந்தவேதிகையுந்தழலோம்புவான். ௯

புற்கரந்தபுரோகிதன்மாமகன்
நற்கரந்தமனத்தனனுகருந்
தற்கரம்பலவல்லவன்சீற்றனுத்
துற்கரன்பெயர்சூதுகுமாரனே. ௧௦

பொய்மயக்குமனத்தன்புலைக்குணன்
மெய்மயக்கறியாதவன்வேட்கையான்
மையனுண்ணிடைவானுதன்மாதனைக்
கைமயக்கம்புரியக்கருதுவான். ௧௧

மாதரார்கண்மயங்கமதனநூல்
வேதநூலைவிரும்பிமனங்கொளும்
பாதகன்பரதாரமினிதெனச்
சூதுபண்ணுந்துறைபடிவஞ்சகன். ௧௨

முறைமயங்கியமூர்க்கனறிவிலா
மறமிகுத்தவன்மாயப்பொடியினுற்
கறையுடற்கரந்தேகங்குன்மங்கையர்
உறைவிடத்தினுமுள்புகுமூமைபோல். ௧௩

வளையுமின்புகழ்மன்னவன்றன்னகர்க்
கிளையவேதியனெய்தலுந்தையலார்
வளைகழன்றனர்வண்டுகண்மூடிய
அளகபாரஞ்சரிந்தனரங்ஙனே. ௧௪

கலைநெகிழ்ந்தனகைவளைசோர்ந்தன
நிலையொழிந்தனநெஞ்சமழிந்தன
உலையிலிட்டமெழுகினையொத்தனர்
வலையின்மானெனலாயினர்மாதரே. ௧௫

மந்திரங்கண்மருந்துகண்மாயையாம்
எந்திரங்களியற்றியவேதியன்
சுந்தரங்கொண்முகங்கண்டுசோர்ந்தனர்
அந்தரத்தினருந்ததிபோன்மினுர். ௧௬

கற்பழிந்ததுகாவல்செய்மங்கையர்
பொற்பழிந்ததுபொய்யுறுதையலார்
வற்கமானமதன்கலைநோக்கியே
நிற்கும்வேதியனெஞ்சமருட்கையால். ௧௭

பஞ்சபாதகன்பாவியிவன்பகை
வஞ்சகன்றனைமாய்க்கவென்றெண்ணியே
விஞ்சைமாநகர்வேதியர்மற்றுளோர்
தஞ்சமன்னனைச்சார்ந்தனர்சொல்லுவார். கஅ

மன்னர்மன்னமடிந்ததுமாநகர்
சொன்னசொல்லறியாச்சுகுமாரனுங்
கன்மமானசண்டாளனைக்காண்பவர்
நன்மையில்லைநரகமுமெய்துவார். க௯

என்னமுன்னமெரியெழுசிந்தையான்
அன்னவேதியனைக்கொண்டணைகென
முன்னமேகொணர்ந்தெய்தலும்மூர்க்கனை
மன்னர்மன்னவனோக்கிவகுக்குமால். உ0

நின்றவேதவொழுக்கினைநீத்தனை
இன்றுநாண்முதலென்னகரெல்லையில்
என்றுமெய்தலையென்னமறையவன்
துன்றுதாரவன்சொல்வழிப்போயினான். உக

வேறு.

திக்கெலாம்புகழும்வேந்தன்றிருநகர்நீத்துப்பாவந்
தொக்கெலாம்நிறையப்பூண்டசுகுமாரன்போனதன்மை
தக்கணாமூர்த்திதேவன்றனதருளனுகவன்பர்
மெய்க்குழாம்பாவசாலம்விளாந்தொழிகின்றவாறே. உஉ

தன்னிடங்கழிந்துஅப்பாற்றராபதியெல்லைநீங்கிக்
கன்னுதிக்காடுசோலைகடந்துவெஞ்சுரத்தின்மாடே
மன்னுயிருடலைவிட்டுப்போயினமரபுபோலத்
துன்னியவினையினோடுஞ்சுகுமாரனடந்துசென்றான். உங

கோடுறுகளிறுபன்றிகொலைபயிலாளிசிங்கம்
ஊடியகலைகள்புல்வாயுயர்புலிமனாயினோடு
நீடியவனங்கண்மீதினெருங்கியவினையினோடும்
வாடியவற்றத்தான்கானம்வாழ்பதியாகக்கொண்டான். உச

கண்ணினின்றொழுகுநீத்தங்கால்வழிப்படரயாழின்
பண்ணுறுமொழியார்வேட்கைபலித்தநித்திறமதேயோ
நண்ணியமகளிர்சேக்கைநணுகுநாளுளவோவென்று
உண்ணெகிழ்ந்துருகிவாடியுன்மத்தனாகிநைந்தே. உரு

ஆங்கொருபொய்கைசேர்ந்து அதனிடையிளைப்புமாறி
ஓங்கியெதிதன்மையாலேயூனுடல்வளர்ப்பனென்றுத்
தீங்குறுகளவுசெய்யச்சிந்தனைகொண்டுதேறிப்
பாங்குறுசோலையொன்றினிருந்தனன்பதகனன்றே. உரு

## வேறு.

அன்னவனிருந்தபொழிலவ்விடமருங்கே
மின்னென நுடங்குகொடிமெல்லிபுலைவல்லி
பொன்னுலகரம்பைரதிபூமகளுமென்ன
அன்னமெனமஞ்ஞையெனஆலமெனவந்தாள். உசா

கங்குலளகங்கரியகாளம்விழிகச்சார்
கொங்கைமதயானையிருகோடெனவிளங்கத்
துங்கவிடையில்லையெனவண்டிசைதொடங்கக்
குங்குமமலர்ப்பொழில்குலாவிவரலுற்றாள். உஅ

வாவிமலரன்னமெனவந்தபுலைவல்லி
காவிடையிருந்தகவின்மேவியகரும்பு
ஓவியதனுப்படையொழிந்துமறையோர்செய்
பாவவடிவைத்தனதுபார்வையினயந்தாள். உகூ

வந்தவளைவெஃகிமறைவேதியன்மகிழ்ந்தே
சுந்தரமினைத்துமொருதொல்லுருவமாகி
அந்தரவிண்ணோரமுதமானதொருமானே
வந்துதமியேனிடரைமாற்றியருளென்றான். நாo

என்னலுமவன்வடிவையெங்குமுறநோக்க
மன்மதனனங்கணைகள்வாடையொடுமீற
வன்னமயில்போலவருவாள்வடிவுகண்டு
கன்னன்மொழியாளொடுகலந்திடநினைந்தான். நாக

ஒருவர்மனமொருவருணர்[illegible]த்துடலமெங்கும்
இருவருயிரொன்றியெழிலொன்றெனநயந்து
உருவிருவரானவகையொண்விழியிலோடி
மருவிவளர்காதலெனுமாயவலைபட்டார். நாஉ

## வேறு.

உருவிரண்டாங்குநீங்கியொருவனையொருவர்நோக்கி
இருவருந்தம்மிலேதாமின்பமுற்றினிதுசேர்ந்து
மருவியேயிருப்பமென்றுமனமலர்ந்துவகைபொங்கக்
குருகுமீன்றனைசகடின்றுகுடிசையொன்றமைத்துவாழ்ந்தார். நாந

வடிவமைமங்கையோடுமனமகிழ்ந்தின்பந்துய்த்துப்
பொடிபடுதசைகடின்றும்பூநாதுடன்சுவையருந்திச்
சடிதுடனுடிப்பாடிக்காமவேள்வேள்வியாற்றிப்
படிறுறுகளவுசூதும்பயின்றனன்பனவன்மாதோ. ௩௪

கன்றொடுகலைகள்கொன்றுங்களவுகள்கவர்ந்துநின்றுஞ்
சென்றநூசிலநாட்பின்புதீமையேநயமென்றெண்ணி
ஒன்றியபாவமெல்லாமுருக்கொண்டகன்மசண்டன்
மன்றல்சேர்மனையாடானுமானனமகளீன்றாள். ௩௫

மானனநோக்கிமின்னுமகிழ்ந்திடவானமீதின்
ஏனைகைஅரக்கையென்னுமிருவரும்வந்தாரென்றே
ஊனுகர்மறையோனண்ணியுவந்துடனெடுத்துமோந்து
பானமுந்தசையுந்தீற்றிவளர்த்தனன்பரிவினோடும். ௩௬

தன்றிறன்மகளிரோடுந்தாவாள்சிலைகோலேந்திக்
குன்றுடன்படுகடீங்கள்குலவுசீர்வனங்கடோறுஞ்
சென்றவருயிர்கள்சிந்தித்திசாமுகம்பலவுமேவிக்
கொன்றிடமாய்ந்தோர்கோடிகோவதையனந்தகோடி. ௩௭

வேறு.

வலையொடும்பலவாரவைகட்டியே
சிலைகொடுங்கணைகொண்டுசினத்திறல்
நிலையழிக்கவும்நின்றவிலங்கெலாம்
மலைவிலோடிமறியவிழுந்திடும். ௩௮

விலங்குபுள்ளுகண்மீன்குலம்வேராறுத்
திலங்குகோயிலிடித்துடனுட்புகா
நலங்கொண்மாநிதிநண்ணுமிடனெலாங்
கலங்கவந்துகவர்ந்துடன்மீளுமே. ௩௯

இல்லைவேதமொழுக்கமிழினூர்தஞ்
சொல்லலாதுபிறிதிலைத்தொல்புவிக்
கல்லதாலயத்துள்ளுறுகல்லென
வல்லசிந்தனைசெய்துமருளுமே. ௪0

மெள்ளவந்துபுகுந்துடன்வீடுகள்
பள்ளிகொள்பவர்சோதனைபார்த்துமேல்
உள்ளதுள்ளதுகொள்ளவுணர்ந்தவர்
கள்ளனென்னக்கடுப்பினொளித்திடும். ௪௧

காரிருட்டிற்கனன்மனைவைத்திடும்
ஆர்கொலென்பவராருயிர்வவ்விடுங்
கோரவீரர்குறித்துத்தொடரிற்றன்
ஊரதாம்வனமோடியொளிக்குமே. ௪௨

பாலிகந்துபசுவைவதைத்திடுஞ்
சீலவேதியர்தம்முயிர்செற்றிடுங்
கோலமாதரைக்கொன்றுபுதைத்திடும்
ஆலமென்னவெகுண்டெழுமாவலால், ௪௩

வேதபாரகர்கோடியின்மேலவர்
சாதிபேதவகையதுசாற்றொணா
மாதர்தம்வதையெண்ணிடின்மற்றதே
ஏதமேதமிவன்மனத்தூற்றமே. ௪௪

ஆளிபோலவளர்த்தனனாசைநோய்
மீளுமாறறியானந்தவேதியன்
வாழுநாள்பலமாண்டபின்வஞ்சகஞ்
சூழவேறோர்துறையினின்முன்னுவான். ௪௫

கொல்லவெண்ணுங்கொடுந்தொழில்வேதியன்
நல்கவந்தெழுநாரியர்நுண்ணிடை
வல்லியென்னவும்வாய்ந்தமுகுண்முலை
வல்லதென்னவும்வாய்ப்பவளர்ந்தனர். ௪௬

தன்மகாரைத்தழுவிடுமாசையால்
மன்மதன்கணைபாயமயங்கியே
புன்மையானபுலைக்குணவேதியன்
வன்மனெஞ்சின்வலிதினணைந்தனன். ௪௭

வேறு.

அரிவையரிருவர்தம்மைஆசையாற்புணர்ந்தநாளிற்
பெருவலிமைந்தர்தோன்றப்பிரியமுற்றுவந்துபுல்லிக்
குருதியுநறவுமூட்டிக்குலவுசீர்ப்புதல்வரோடும்
மருவியேசிறிதுகாலம்வாழ்ந்தனன்வாழுநாளில், ௪௮

வேதியரனேகர்தூசுவாங்குவான்விபினபாதை
போதரப்புதல்வரோடும்போந்தவர்பொருளைவவ்வி
மோதியங்கவரைமாய்ப்பமுடிகெழுகவுடமன்னன்
நீதியார்நெறிக்குத்தப்பிநிறைகாம்பிதேசம்புக்கான், ௪௯

ஆங்கணமீதுசின்னாளிலவையர்த்தழுவிவாழ்ந்து
பூங்குழன்மாதரோடும்புதல்வர்கள்பலரைப்பெற்றுப்
பாங்குறுமாந்தரிந்தப்பாவிதன்செயல்கள்கண்டே
ஏங்குறப்புவிக்குப்பாரமாகியேயிருக்குநாளில். ௫௦

வாசவன்பதியைநோக்கிவணிகர்தந்நகரிலுள்ளார்
பூசுவார்முடிப்பாராகிப்புதல்வர்பூங்குழலாரோடும்
மாசிசேரபரபக்கமலிசதுர்த்தசியிராவிற்
றேசுலாமகிமையான சிவநிசிநோற்பச்சென்றார். ௫௧

குண்டலமுருத்திராக்கங்கோலமார்விபூதிசாத்தித்
தொண்டருக்கன்பர்பாதத்துணைகடந்நெஞ்சநாட்டி
அண்டர்பேரழகுசெய்வானரன்றிருக்கோயிலெய்திக்
கண்டுளிபனிப்பயோகக்கடலகத்தழுந்திநின்றார். ௫௨

வேறு.

பொன்னின்மணிபுதுவெண்டுகில்புனைமாமலர்த்தொடையுங்
கன்னல்வளர்கதலிக்குலைகாய்த்தெங்கொடுகமுகுஞ்
சொன்னந்திகழ்கயிலாசகிரித்தேவனைத்துதித்து
முன்னும்படிஅரிதாஞ்சபைமுழுதுஞ்சிறப்பித்தார். ௫௩

கொத்துப்பரிமளதாமரைகுமுதங்கரவீரம்
மத்தத்தொடுதுளபம்வளர்மல்லிக்குலமலருந்
தொத்தொத்திடுமந்தாரையுஞ்சூட்டிப்பரசிவனை
சுத்தத்தொளிரொளியேயருளென்றேபலர்துதித்தார். ௫௪

வேறு.

இன்னவர்களின்னவகையெய்துதல்செய்போதின்
முன்னைவினைதள்ளவருமூர்க்கனியல்பாக
வன்னமதுவுண்டுவெறிமீறிவழிதப்பித்
துன்னுமிருள்வந்துசுகுமாரன்மலர்கொய்தான். ௫௫

தன்னுடையதேவியர்கடாமமணிசெய்து
வன்னமுறுகூந்தலின்முடிப்பமலராய்வோன்
முன்னைமுதலைக்கருணைமூர்த்தியைவழுத்துந்
துன்னுதவபூசனைதுலங்குமொலிகேளா. ௫௬

இந்தவகையிவ்விரவிலென்னவெனவெய்திக்
கந்தமலிகொன்றையணிகண்ணுதலைநோக்கச்
சிந்தனையழுந்தவளர்சின்மயவயத்தால்
அந்தமறையோன்வினைகள்யாவுமழிவெய்த. ௫௭

கண்டுகளிகூர்ந்துகதிர்கண்டபனிபோல
மண்டுவினையோடமதிவேணியனைவாழ்த்திப்
புண்டரிகமென்கழல்கள்போற்றியயல்போனான்
வண்டுபடிமுண்டகமலர்த்தொடையன்மாதோ. ௫௮

வேறு.

போயினன்சிறிதுகாலம்பொற்கொடியோடும்வாழ்ந்தே
ஆயவனிருந்தவேலையாருயிர்கவர்வதாகக்
காயெரியென்னப்பொங்கிக்கயிற்றொடுசூலமேந்தி
மாயைகடிரண்டவென்னவந்தனர்மறலிதூதர். ௫௯

இருட்பிழம்பனேகமாகியெயிறெனும்பிறைகண்பின்ன
மருப்பினைகுஞ்சியென்னும்வாடவமுடிமேலோங்கக்
குருத்திகழ்தாநடந்தகோலமார்காலதூதர்
தெருட்பொருடன்னைக்காணுஞ்செல்வனைவளைந்தாரன்றே. ௬௰

வேறு.

எம்பிரானருளுற்றவிருங்கணஞ்
செம்பொன்மால்வரைநேர்தருதேர்கொடே
அம்புவிக்கணணுகினரம்புதி
வெம்புதீயைவிலக்குவபோலவே. ௬௧

நீறணிந்தனர்நெற்றியிற்கண்ணினர்
மாறிலாதவர்மான்மழுவேந்தினர்
நூறுகோடியர்நுண்ணிதினண்ணினர்
ஆறணிந்தஅரனருள்வாய்மையால். ௬௨

எய்துமெல்லையமன்விடுதூதுவர்
வெய்துகொண்டிடுவேதியன்றன்னுயிர்
ஐதெனும்படிபாசத்தழுந்தவே
செய்தகாலைச்சிவகணங்கண்டனர். ௬௩

விடும்விடுமிவன்வேதியன்மாதவன்
கடுநுகர்ந்தருள்கண்ணுதற்றம்பிரான்
அடிமையாஞ்சுகுமாரனையன்பிலாக்
கடியர்போலக்கருதலிரென்னவே. ௬௪

இந்தவண்ணமெதிர்த்துரைசெய்யவும்
அந்தகன்விடுதூதரறிந்துநீர்
வந்தவாறுரையும்மெனமாதவர்
இந்தவேதியன்றன்னிடமென்றனர். ௬௫

### வேறு.

என்றவருரைப்பக்கேட்டேயமன்விடுதூதர்சொல்வார்
இன்றிவன்செய்தபாவமெண்ணிறந்தொருமலையுமுண்டோ
வன்றிறன்முதலைநாய்கள்வாளுடைப்புழுக்களோரி
துன்றியநரகமிந்தச்சுகுமாரற்காவதென்றார். ௬௬

ஆங்கவர்பகரக்கேட்டஅரன்றிருக்கணங்களெல்லாம்
ஓங்கியஎரிபோன்மண்டிஉருத்தெழக்கண்டதூதர்
ஈங்கிவனுயிரைவவ்வும்யாவர்நீர்சொன்மினென்னப்
பூங்குழலுமையாள்பாகன்பொன்னடித்தொண்டர்சொல்வார். ௬௭

### வேறு.

மாயன்அயன்மாமறலிவானவர்கள்கோமான்
ஆயவர்பதங்களொடுவாழ்வையுமளிப்போன்
காயுமலர்வாளியுறுகாமனையெரித்தோன்
தூயசிவனாரடிமையென்றனர்கடொண்டர். ௬௮

உங்கடிருமன்னனைஉருத்தவன்வருந்தச்
செங்கமலநேர்தருதிருச்சரணினாலே
அங்கனுதைசெய்தருளரன்கடிவருந்தும்
அங்கணர்தனக்கடிமையாம்அறிதியொன்றார். ௬௯

அன்னவர்கள்வெள்ளிமலையத்தர்புகழ்கூற
மின்னும்வடிவாள்பரசுவேறரிகரத்தோர்
பின்னுமுறைநீங்குபடுபாவிபெருமூர்க்கன்
றன்னுயிரினைத்தருதிரென்றெதிர்தடுத்தார். ௭௦

மிக்கயமதூதருறுவீரநிலைகண்டே
அக்கமொடுகொக்கிறகணிந்தசிவதொண்டர்
தொக்ககடல்புக்கவடவைக்கனல்சுருங்கி
அக்கநமன்படையடுத்தெனமுனிந்தார். ௭௧

ஒன்றொருவர்விட்டகணைஉம்பருலகெல்லாம்
பொன்றளிசிந்தமிகுபோரதுமலைந்தார்
குன்றுகுலமேருவொடுகோலமுகிலெல்லாம்
வன்றிறலினோடெதிர்மலைந்தவகையொப்ப. ௭௨

கையொடுகையற்றமிகுகாறகரவீழ்வார்
மெய்துணியமார்பினிடைவேலதனையேவிச்
செய்யதலைகொய்துசெவிநாசிகள்சிதைப்பார்
ஐயன்விடுதூதர்எமதூதரையடர்த்தே. ௭௩

வாதமொடுமாதிரமலைந்ததெனஅம்பொற்
சோதிவிடுதொண்டர்எமதூதரைமுருக்கப்
போதுமெனவங்கமுறுபோர்விசயமாறி
ஓதுபுகழ்மாமறலியூர்க்கடிதடைந்தார். ௭௪

நேசமிகுமாமறலிநின்னபயம்இன்றே
ஈசனுடைமாதவர்களெம்முடனெதிர்ந்து
பாசமொடுதண்டதுபறித்துமறையோனைத்
தேசமிகுதேர்கொடவர்சென்றனர்களென்றார். ௭௫

வேறு.

அந்தகனவ்வுரைகேட்டுவடவைத்தீபோ
லழன்றுளமேகொதித்தெழுந்துபழியேமிக்க
அந்தணனைவழிவிலக்கிக்கொண்டுபோவா
ரவருயிரைக்கடிதுவவ்வியன்பிலாத
அந்தணனைப்பாசமதிலழுந்தவீக்கி
அருநரகில்விடுப்பனெனவகத்திலுன்னி
அந்தகனுந்தனதுதொண்டரானதூத
ரவர்முகம்பார்த்தொருமொழியையறைவதானான். ௭௬

வேறு.

உருமெனக்கொடியபாவியுயிர்கவர்ந்தேகத்திய
செருவடற்படைகளேந்துஞ்சிவகணநாதர்தம்மைப்
பொருமிடறணித்துச்சிந்திப்பூசுரனுயிரைவவ்வி
வெருவருநரகில்வீட்டும்மேலிவைகாண்டிரென்றான். ௭௭

சண்டனந்தவுரைகூறச்சதுமுகன்காலகாலன்
துண்டன்மிண்டன்பிறையெயிற்றன்சூரன்வீரன்வரமாலி
பண்டன்சுவேதனணிமாலன்பகனனந்தகாசுவன்சீர்க்
குண்டன்மேகவண்ணனதிக்குழுவாங்காலபடரெழுந்தார். ௭௮

வாளொடுசூலம்வைவேல்வச்சிரம்பிண்டிபாலம்
நீள்சரஞ்சவளஞ்சத்திநிறைமழுமுசுண்டிசக்ரம்
ஆளவேயேந்திச்சென்றார்அந்தகன்றூதரப்போ
கோளுடன்சிவகணங்கள்குறித்தெதிர்மலைந்தாரன்றே. ௭௯

எரியெனச்சரங்களேவியெம்பிரான்றூதரேற்ப
உருமுகில்வீழ்வதென்னவுடல்பலகவந்தமாடக்
கருகினர்காலதூதர்கலங்கியேமுரிந்துசாய்ந்தங்
கொருவழியொருவர்போகாரோடினரூணாகடி. ௮௰

வேறு.

பாசமுஞ்சூலமும்பறித்துக்கொண்டுடைமை
ஆசிலாப்படையினாலறுத்துவீட்டியே
மாசினாகியமறையவன்றனைத்
தேசுடைத்தேர்மிசையேற்றிச்சென்றனர். ௮௧

சிவகணமென்னவேசெப்புஞ்சொல்லினைப்
பவமனக்காலனார்பரிந்துகேட்டபின்
உவமையில்சித்திரவோதுவேதியன்
தவநெறியாதுநீசாற்றுகென்றனன். ௮௨

என்னலுஞ்சித்திரனேற்றசிந்தையின்
முன்னுறநாடியேமுதல்வகேளென
அன்னவேதியன்செயலனைத்துங்கூறியே
மன்னவநரகவன்வாழ்க்கைதிண்ணமே. ௮௩

என்றவனியம்பலுமெரிந்து அந்தகன்
நன்றுநன்றேகொலாநம்மனோர்செயல்
என்றிதையீசனுக்கியம்புவேனெனாச்
சென்றனன்கயிலையங்கிரியைத்தேடியே. ௮௪

ஈதிவனேகலும்எம்பிரான்விடுந்
தூதர்தஞ்செயலினைச்சுருக்கிச்சொல்லுவாம்
வேதியன்றனைமணிவிமானத்தேற்றியே
தீதிலாச்சிவபதஞ்சென்றங்கெய்தினார். ௮௫

வேறு.

அண்டமெலாங்கடந்தபொருண்ஞானயோகம்
அறிவிபுதரிதயமலரமைந்துளத்துந்
தொண்டினர்கடனையறியவருளைநாட்டித்
தோகைமலைவல்லியிடப்பாகந்தோன்றப்
புண்டரிகன்றிருமகிழ்நன்முதலேயான
புங்கவர்கள்அரகரவென்றடிகள்போற்றத்
தண்டரளத்தமனியப்பொற்கோயிலுப்பட்
சங்கரனார்வீற்றிருக்குஞ்சமயந்தன்னில். ௮௬

வேறு.

கோடிசூரியர்மாமதிகோடிகள்
கூடுபேரொளியாயினகோலமே
பாடிமாலன்றுதேடியபாதத்தைச்
சூடினான்சுகுமாரன்றுயர்கெட. ௮௭

கணணில்நஞ்சிவராத்திரிகண்டதால்
நண்ணிமெய்தினைநம்மடியாருடன்
எண்ணில்பாவமெலாமெரிந்தோடின
புண்ணியச்சிவரூபம்பொலிந்தனே. ௮௮

இன்பமாஞ்சிவலோகத்திளெய்தியே
அன்பரோடமர்வாயென்றருள்செய
என்பணிந்தஇறையருள்கொண்டொரீஇம்
முன்பனத்துவமுத்திமுதிர்ந்தனன். ௮௯

வேறு.

முனிவிர்காளனேகபாவம்முதிர்ந்தவிப்பிரனூரந்தப்
புனிதமாஞ்சிவமுத்திபொருந்துமெய்க்கதையைக்கேட்டோர்
இனிதெனுப்படித்தோர்யாரும்இகபரசுகங்களெய்திக்
கனகவில்லாளிசெம்பொற்கழலிணைமருவுவாரே. ௯௦

சூதகுமாரன்முத்திபெற்ற - அத்தியாயம் - முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம் - ௨௫௨.

—•◦❀◦•—

நாலாவது.

## இயமனுக்குச் சிவனுபதேசித்த அத்தியாயம்.

—•◦❀◦•—

தூயவேதியன்காதையைச்சொற்றனம்
வெய்யஅந்தகன்மேருவில்லாளிசீர்
மெய்யிலங்குகயிலையின்மேவியே
ஐயந்தீர்கதைதன்னையறைகுவாம் ௧

என்றுசூதனிசைத்துமனங்கொள
வென்றிவேல்நமன்காதைவிளம்புவான்
துன்றுகாலபடரொடுசூரியன்
மன்றன்மாமகன்மைடமிவர்ந்தரோ. ௨

பாசசூலம்பரித்துப்படரொளி
வீசுமாமணிமென்றுகில்சாத்தியே
ஓசைசேர்தரும்பர்வணங்கிடத்
தேசுலாவுந்திருநகர்நீங்கினன். ௩

குடமுழாப்பணைகொக்கரை தண்ணுமை
படகமெங்கினபம்பையொலித்தன
வடிகொள்வேன்மறவீரரும்வந்தனர்
படிநடுங்கப்பருப்பதம்பாறவே. ௪

திக்கயங்கள்சிதறிமலைந்தன
மிக்கவேலைவெருண்டுபுரண்டன
தொக்கசேனைகள்சூழத்தொலைவிலா
நக்கன்வெண்கயிலாயத்தைநண்ணினான். ௫

வேறு.

கண்ணுதல்பூதங்காணக்கடுகியேவந்துமன்னன்
விண்ணுறுகிழக்குவாய்தல்மேவுமாதவனைப்போற்றி
நண்ணினனடியேனென்றுநவிலுதிசிவனுக்கென்றான்
புண்ணியநந்திசென்றுபுராரிதன்கழல்பணிந்தான். ௬

எம்பிரான்பதங்கள்போற்றியியம்புவான்நந்திதேவன்
வம்புலாங்கொன்றைமாலைமதியணிசடையாய்மேருப்
பைம்பொனார்சிலையாயின்றுன்பதம்பணிந்தேதகக்காலன்
நம்பனேவந்தானென்றான்நாதன்புன்முறுவல்செய்தே. ௭

தருதிநீநமனையென்னச்சங்கரனருளைப்போற்றி
வருதிநீயென்றுநந்திவகுத்தலும்மறலியென்பான்
குருதிவேலுழவர்தம்மைக்கோயிலின்புடைநிறுத்திச்
சுருதியுமுலகுமானசோதிசன்னிதியிற்புக்கான். ௮

வேறு.

அரியாதியுயிராகியுலகமாகியண்டமெலாங்கடந்த
பொருளாகிநிற்கும்
பெரியானைமறைப்பொருளையனந்தகோடி
பேதமெலாங்கடந்தருளும்பெருமான்றன்னை
வரைநேருந்தனிவனிதையிடப்பாலாகவதிய
அரகரவெனவேயடியர்வாழ்த்த
நிரைசேருமிருவிழியான்மறலிகண்டான்
நித்தியமாரானந்தநிறைவுற்றானே. ௯

வேறு.

எம்பிரான்கணங்களோடுமிருந்தருள்சபையின்மீதே
உம்பாமண்மிசையினுள்ளோருயிருணும்மறலிபுக்கு
வம்புலாமலர்கழலிவலம்வந்துமுக்காற்போற்றித்
தம்பிரான்றனக்குமுன்னேதந்தமுத்திரையைவைத்தான். ௧௦

வைத்தபின்றொழுதுகையான் மலர்மழைசொரிந்துவாழ்த்தி
அத்தனேயமரர்கோவேஆதியேபரனேயோக
சித்தனேதெரியொணுதேவர்கட்கேவேஞான
முத்தனேயென்னையாண்டமுழுமுதற்பொருளேபோற்றி. ௧௧

பூதமுங்கரணநான்கும்புலன்களுங்கடந்தாய்போற்றி
வேதமுந்தேடிக்காணுவிழுப்பரம்பொருளேபோற்றி
ஆதியாயந்தமாகியனுதியாம்முதல்வாபோற்றி
சோதியேசுடராயோங்குந்தொலைவிலாப்பிழம்பேபோற்றி. ௧௨

விண்முதற்பூதமைந்தும்விளங்குமேக்குணமுந்தேறி
எண்முனிவோர்கள்சிந்தையிலங்கியபொருளேஞானக்
கண்மணியொளியாய்நின்றகாரணமுதலேயோகர்
உண்மகிழ்தியானத்தூடேஒளிருமெண்குணனேபோற்றி. ௧௩

வேறு.

காலமுங்கருமமுங்கடந்தநித்தனே
சூலவெம்படையிறைதுலங்குபாற்கடன்
மேலெழுவிடத்தினைவிரும்பியுண்டருள்
நீலகண்டாநமநிமலமூர்த்தியே. ௧௪

என்றிவன்பன்முறையிறைஞ்சியேத்தலுங்
கொன்றைமாலிகையணிகுளகன்மன்னெதிர்
நின்றிடுமன்றனைநோக்கிநின்செயல்
நன்றதாவுலகினில்நடந்ததோவெனு. ௧௫

குதலைவாய்மொழிமகார்கூறுமின்சொலை
அதிவிருப்பாகவேயாயுமன்னைபோல்
மதலைவேணியன்சொலமறலிகைதொழா
விதிர்விதிர்ப்புடனிவைவிளம்புவானரோ. ௧௬

வேறு.

விந்தமால்வரையினுத்தரதிசைக்கண்
விளங்கிடுங்குஞ்சரநகரின்
வந்துதோன்றினனன்மறையவர்நெறிகள்
வழுக்கியதீயதோர்பதகன்
அந்தவந்தணன்பெயரினைமொழியி
னருஞ்சுகுமாரனுமவன்செய்
சந்தமில்லதோர்பாவத்தின்றொகையினைச்
சாற்றுமாறெங்ஙனமையா. ௧௭

வேறு.

வேதவேதியர் தம்வதைவேறுள
மாதர்தம்வதைகோவதைமற்றுளு
ஏதமேதமிவன்புரிதீவினை
பாதகங்கள் பகரினனந்தமே. ௧௮

முறையிகந்துமுகுன்மூலமக்களை
வெறிகொள்பித்தரின் மேவியிணைந்தனன்
அறிவுநற்செயலானவையாவையும்
அறிகிலானவனன்னலி துன்மையே. ௧௯

அந்தவிப்பிரனுவியொடிங்குநாள்
முந்துமென்னுடைதூதரைமொய்ம்புடன்
சிந்தியேசிவநாதநின் ஞொண்டர்கள்
பந்தநீக்கிப்பரகதியுய்த்தனர். ௨௦

புண்ணியம்புரிவோர்கள்புரையிலா
விண்முதற்பல்புவனமுமேவுவார்
நண்ணுபாவர்நரகுறுவாரென
அண்ணல்நீசொல்லுரையுமழிந்ததே. ௨௧

இந்தவாறுறினென்னரசென்பெறுங்
கொந்துலாவியகொன்றையணிசடை
அந்தணுளனக்கன்றருண்முத்திரை
முந்தசன்னிதிவைத்தனன்முன்னரோ. ௨௨

தருமனும்பெயர்தன்னையிழந்தனன்
பெருகுமிவ்வரசாட்சியைப்பேணலேன்
உருகுதொண்டருடனுறநல்வரந்
தருதியென்றிருதாளினைப்போற்றினன். ௨௩

வேறு.

அந்தகனுரைத்தவார்த்தையாவையுமமலன்கேட்டுச்
சுந்தரப்பதாம்புயத்தைத்தொழுதிடுநமனைநோக்கிச்
சிந்தனைதன்னில்யாவுந்தேறலாநமனேயந்த
அந்தணன்பாவம்யாவுமழிந்தனபுனிதனுனன். ௨௪

இந்தவாறமைதற்கேதுயாண்டுளதென்னையாயின்
மந்திரப்பொருளாநம்மைமாசிமாமதியிற்றோன்றுஞ்
சந்ததவபரபக்கச்சதுர்த்தசியதனிற்கண்டான்
சிந்தனையுருகிப்போற்றத்தீவினைகழிந்ததன்றே. ௨௫

வேறு.

எண்ணிலாவினையெத்தனைகோடிகள்
பண்ணினும்பரிவுடன்பண்டொர்நாட்
கண்ணினஞ்சிவராத்திரிகண்டதால்
நண்ணியெய்தினன்நம்பதமென்றனன். ௨௬

வேறு.

வேனில்வேளெரிந்துவீழவிழித்தருள்விமலாபோற்றி
ஞானமாம்விரதமென்றுநண்புடன்நோற்றதல்லப்
பானமுந்தசையுந்தின்றுபாரியர்குழற்குச்சூட்டக்
கானமர்மலர்கள்கொய்யக்கடிதினில்வந்தானையா. ௨௭

என்னவேமறலிகூறநேசன்புன்முறுவல்செய்தே
தன்மனையிரவிமுன்னர்த்தமமெனலாகுமென்றே
மின்வளர்சடையர்யோகர்விளங்குமெய்ஞ்ஞானதீக்கைத்
துன்னுசீரறிஞர்முன்னீசேறலையென்றுசொன்னான். ௨௮

சங்கரனுரைப்பக்கேட்டசண்டனுண்மகிழ்ந்துபோற்றிப்
பொங்கரவணிந்தநாதாபூரணமனத்தியானந்
தங்குபேரொளியேயந்தச்சிவநிசித்தகைமையெல்லாம்
இங்கெனக்கருடியென்னவிறைஞ்சியேவணங்கிநின்றான். ௨௯

ஆங்கவனுரைப்பக்கேட்டவண்ணலாருவகைகொண்டு
பாங்கமர்மறலிகேட்பப்பகருவான்பரிவினோடும்
ஓங்குசீரிருவர்தேடவொளிர்வளர்நிசிபுவிக்கண்
நீங்கலின்மாதந்தோறும்நிலவுமெய்விரதந்தானே. ௩௰

மாசியிலபரபக்கமலிசதுர்த்தசியின்மிக்க
நேசமாய்க்கமலயோனியருச்சனைநிரப்பியுற்றான்
பாசமார்பங்குனிக்கட்பதிபூர்வதிருதியைக்கட்
கேசவன்பூசைசெய்துகிளக்கலாவரம்பெற்றுய்ந்தான் ௩௧

தேமொழியுமையாள்மேடத்திங்களினபரபக்க
நாமவட்டமியிற்பூசைநவையறப்புரிந்தாள்பானு
காமருமிடபமாதங்கலைநிறையட்டமிக்கண்
ஏமுறப்பூசைசெய்தானீசானனானிமாதம். ௩௨

மதிநிறைசதுர்த்திதன்னின்வழுத்தியர்ச்சனைபுரிந்தான்
புதுமயிலூர்தியாடி[illegible]குறைபஞ்சமிக்கட்
டுதிகொள்பூசனைபுரி[illegible]ன்சோமனாவணியின்மேவும்
விதமுறுபூர்வபக்கத்தட்டமிவிழைந்துநோற்றான். ௩௩

கன்னிசேர்பூர்வபக்கங்கருதுபன்மூன்றுநாளிற்
பன்னகாதிபனுந்தலைமதிமதியம்பரவுசிர்த்துவாதசியதனிற்
பொன்னுலாவியபூண்முலைச்சிமஞ்ஞுளனும்புனைநீர்
மின்னனேரிடைக்கலைமகன்விருச்சிகநிறைந்தசத்தமியின் ௧௪

ஆவலாலெமைப்பணிந்தனர்தனுவினம்புலிநிறைசதுர்த்தசியின்
மேவுசெந்துகிர்நிகரிதழ்மனோன்மணிவிரும்பியர்ச்சித்தாள்
ஓவில்தைமதிப்பூருவசதுர்த்தசியுவந்தனணிடபன்
ஆவதாகவேபன்னிருசிவநிசியாயினவென்பதையறிநீ. ௧௫

இந்தவாற்றினிணைமைந்துள்சிவநிசியென்னலாமிவற்றுள்
முந்துதைமதிச்சதுர்த்தசிமருவியமுதன்மைசேர்திங்கள்
அந்தநாளுறிற்சிவநிசிமுக்கோடியினடைபலனுகுஞ்
சுந்தரஞ்செறிபானுவேவந்திடிற்சொற்றிடுஞ்சிவநிசிக்கிணையே. ௧௬

சொற்றிடுஞ்சிவராத்திரிதுகளறுஞ்செகதலமுய்யப்
பற்றினோடெமைப்பூசனைபண்ணியபலனெலாமுதவும்
பெற்றிகொண்டுளமாகவான்றிங்களிற்பிறங்கியதனகசேர்
கொற்றமார்சிவராத்திரியதனுடைநின்னையங்கூறும். ௧௭

பகலின்முப்பதுகடிகையும்பத்துமூன்றுய
நிகரில்வான்றிதிமருவியேசதுர்த்தசிநேரில்
மகிமைசேர்தினமாகுமெய்ச்சதுர்த்தசிவைகறைதன்னிற்
றிகழுமற்றைநாட்சேர்ந்திடின்மத்திமநிசியே. ௧௮

தரிசமோடுறுஞ்சதுர்த்தசியதமமாய்ச்சாற்றும்
பரசுவோர்திரயோதசியொருகலைபற்றியேவரினும்
உரியதோர்சிவராத்திரியாகவேயுவப்பர்
தெரிசசங்கமச்சதுர்த்தசிசீவனில்சடமாம். ௧௯

வேறு.

சதுர்த்தசிசமதுரூபஞ்சத்தியின்வடிவுமேன்மை ம
விதித்தபன்மூன்றதானதிதியெனவிளம்பலாகும்
மதித்தவிப்படியேசேரிற்சிவலிங்கவடிவமன்பர்
விதித்தநன்னியமமுற்றிப்பாரணைவிரைந்துசெய்வார். ௨௰

தெரிசமோடுறுஞ்சதுர்த்தசிசிரவணநாளின்
மருவிவந்திடின்வைதிகர்விரத்தர்மற்றையர்க்கும்
உரியதோர்அமவாசியாந்தீங்குறுதுவந்து
பெருகுமன்பொடுநோற்பவர்நமதுருப்பெறுவார். ௨௧

இந்தவாற்றிறுஞ்சிவநிசிப்பெருமையுமியாவும்
அந்திவண்ணனருளாசெயவந்தகன்கேட்டுச்
சுந்தரஞ்செறிபதமலர்சென்னியிற்சூட்டி
அந்தமில்லதோரன்புடனற்றன்னகரடைந்தான். சஉ

வேறு.

வந்துதம்பதியெய்தியமன்னவன்
அந்தமற்றதோராசனமீதினிற்
சிந்தையின்பமதாகிச்சிறந்துபின்
எந்தைசொற்றனயாவையுமெண்ணினன். சங

எண்ணிமந்திரரோவலர்யாவர்க்கும்
அண்ணல்சொற்றனயாவுமருளியே
புண்ணியச்சிவராத்திரிபொற்புற
நண்ணிநோற்றுநயந்தரசாண்டனன். சச

வேதவாய்மைவிளங்குமுனிவிர்காள்
ஆதிதேவனருள்வடிவாகிய
தீதிலாச்சிவராத்திரிசெப்பிடிற்
பாதகம்பழிபாவமழிக்குமே. சரு

தத்துவத்துறைகண்டதபோதன
உத்தமர்க்குமுணர்வறைபோகிய
பித்தினர்க்குமொருவழிப்பேரருள்
நித்தமீயும்அரநிசியென்பவே. சசு

சீதரன்அயனர்ச்சனைசெய்துபின்
மேதகும்பதம்பெற்றனர்வேடுவன்
ஏதமில்சிவன்மேனியிறைஞ்சியே
பாதகந்தொலைந்தோங்கினன்பாங்கிலா. சஎ

வேடமெய்தியவேதியன்பண்டோர்நாள்
நீடுபூசனைகண்டுநிருமலன்
பீடுசேர்பதம்பெற்றனனந்தகன்
ஆடல்சான்மயல்நீங்கினனந்தணீர். சஅ

விரதராசசிவநிசிமேன்மையைச்
சரதமீசனருள்கொடுசாற்றினேன்
வரதஞானவசிகரமெய்யருள்
கரதலாமலகம்மெனக்காட்டுமே. சகு

வேறு.

சிவநிசிப்பெருமைதன்னைத்திருந்துறக்கற்போர்கேட்போர்
உவமையிலிகபரத்திலுறும்பொருள்யாவும்பெற்றே
பவனருட்சலதிதாழ்வர்பகருமிப்புராணம்வைகும்
உவமையின்மனைகடோறுந்திருமகளுவந்துவாழும். ருo

வேறு.

மழைவழங்குகமன்னவரோங்குக
அழகுசேர்புவியிருக்கநல்லறந்
தழையுமஐந்தெழுத்தோங்குகசங்கரன்
பழையனைவ்திகசைவம்பரவவே. ருக

இயமனுக்குச் சிவனுபதேசித்த அத்தியாயம்

முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்-௧0௧.

பாயிர அத்தியாயம்—கசு.
விட்டுணுவராகமாய் உதித்த அத்தியாயம்—எசு.
அங்குலன் முத்திபெற்ற அத்தியாயம்—எo.
சூதுகுமாரன் பதவிபெற்ற அத்தியாயம்—சுo.
இயமனுக்குச் சிவனுபதேசித்த அத்தியாயம்—ருக.
அத்தியாயம் ரு-க்கும் ஆகத்திருவிருத்தம் ௧0௧.

சிவராத்திரி புராணம் முற்றிற்று.



# பிழைதிருத்தல்.

| பக்கம். | பாடல். | வரி. | பிழைகள். | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௪ | ௬ | ௧ | டாணுவும் | டாணுவும் |
| ௮ | ௩௧ | ௩ | வெஞ்சமர் | வன்சமர் |
| ஷை | ௩௩ | ௧ | மாசியின்மாமதி | மாசியிற்றேய்மதி |
| ஷை | ஷை | ௨ | பத்துநாளதுநாளிற் | பத்துநாலுதிதியிற் |
| ஷை | ௩௪ | ஷை | பேறிலோரொளியாயினபேறுபோம் | பேறிஞரொளியாயினபெற்றிபோம் |
| ௧௧ | ௫௮ | ௨ | குருப்பதம் | குருபதம் |
| ௧௩ | ௭௧ | ௪ | தேவர்தஞ் | தேவருஞ் |
| ஷை | ௭௨ | ௧ | மறைசேர் | மறைதேர் |
| ஷை | ௭௫ | ௪ | முன்னண்பனை | முன்னம்பனை |
| ௧௫ | ௮ | ௩ | விளையாடும் | வினையாடும் |
| ௧௭ | ௨௬ | ௨ | ஊனுகர்ந்திட | ஊனுகண்டிட |
| ஷை | ௩௩ | ஷை | [illegible]ளையோடிந்திரபானமுறைந்தகுடங்கர் | [illegible]ளையூடிந்திர பாணமறைந்தகுடங்கர் |
| ௧௯ | ௪0 | ௩ | வெந்தவயநீர் | வெந்தஅயநீர் |
| ௨௧ | ௪௮ | ௩ | வேகமார்வடிவை | வேகமார்வடவை |
| ௨௧ | ௫0 | ௧ | வண்ணமுமாய் | வன்னமுமாய் |
| ஷை | ௫௧ | ஷை | அகண்டமார்முனிவர் | அகண்டமாமுனிவர் |
| ௨௨ | ௫௪ | ௨ | பாட்டயரும் | பாட்டயர |
| ௨௩ | ௬௧ | ௧ | வரசு | அரசு |
| ௨௫ | ௩ | ௪ | இந்துமேலொலி | இந்துமெல்லொளி |
| ௨௬ | ௧௪ | ௧ | வளையுமென்புகழ் | வளையுநன்புகழ் |
| ௨௮ | ௨௯ | ௩ | யொழிந்து | யொழிந்த |
| ஷை | ௩௨ | ஷை | விழியிலோட | விழியிலோடி |
| ௨௯ | ௩௫ | ௨ | சென்றது | சென்றன |
| ஷை | ௩௫ | ௪ | மகளிரீன் | மகளிரீன் |
| ௩௬ | ௮௯ | ௩ | கொண்டொராய் | கொண்டொரீஇ |
| ௩௭ | ௬ | ௨ | வூய்தல் | வாய்தன் |
| ஷை | ௯ | ௩ | முலைவனிதை | தன்வனிதை |
| ௪0 | ௨௮ | ௩ | தீக்கைத் | தீக்கை |
| ஷை | ௨௯ | ௨ | பொங்ர | பொங்கர |
| ஷை | ௩௧ | ஷை | கமலையோனி | கமலயோனி |